# தமிழறியும் பெருமாள்

கதை

[பெரிய எழுத்து]





B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்
41, வெங்கடராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.

உ

கடவுள் துணை.

தமிழறியும்

# பெருமாள் கதை



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

இதன் விலை] 1933. [அணா 6.

உ

கடவுள் துணை

# தமிழறியும் பெருமாள்

## கதை

---

### காப்பு

சண்பகமேவீசுந் தமிழறிவாடன்பேரில்
பண்புடனேசெந்தமிழைப் பாடுதற்கு-என்புவியில்
வேளைவிழித்தெரித்த வித்தகனார்பெற்றெடுத்த
காளைமதக்களிறே காப்பு.

அளகாபுரியென்றொரு பட்டணமுண்டு. அதிலே அளகேஸ்வரனென்றொரு இராசன் ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான். அவனுக்கு ஏலங்குழலாளென்றொரு குமாரத்தி பிறந்தாள். அவள் பன்னிரண்டு நிலை உப்பரிகையின்பேரிலே யிருந்துக்கொண்டு தன்னுடைய தோழிமாரும் தானுமாக நடந்து விளையாடிக் கொண்டிருக்கும்போது, பின்னையொரு தேசத்திற் பாடலிபுர மென்றொரு பட்டணமுண்டு. அந்தப் பட்டணத்துக் கதிபதியான பத்திரகிரிராசாவுக்கு சந்தனகுமார னென்றொரு பிள்ளையுண்டு. அவனைப் பள்ளிக்குவைத்து வித்தைபடிக்கின்ற நாளையிலே வித்தை மனதிலே தரியாமல் மூடனாகச் சிலநாளிருக்கையில் ஒருநாளிராசன் பிள்ளையைப்பார்த்து, இப்படிக்கொத்த கல்வியற்ற மூடப்பிள்ளை யிருந்தென்ன போயென்ன வென்று மனஞ் [illegible]ததுக்கொண்டான். அந்தப் பிள்ளையும் [illegible]த்தி நமக்கு எழுத்துவாசனை யில்லாத படியினாலேயல்லவோ நம்முடைய தகப்பனார் கோபித்துக் கொண்டாரென்று மனது சிந்தாக்கிராந்தனாகப் புறப்பட்டுத் தேசாந்திரம் சுற்றித்திரிந்து தேசங்களுடைய புதுமைகளும் பார்த்து ஒருவருஷந் தேசசஞ்சாரம்பண்ணியதன்பிறகு அளகாபுரி பட்டணத்தில்வந்து அந்த பட்டணத்துப் புதுமைகளும் பார்த்து இனி யப்பாலே போகவேண்டுமென்று புறப்பட்டுவரச்சே யுப்பரிக்கையை அண்ணாந்து பார்த்தா னந்த உபபரிகை

யின்பேரிலே பூரணச்சந்திரன் உதயமானதுபோல, பந்தடித்துக்கொண் டிருக்கிற இராச குமாரத்தியைக் கண்டான். அந்த இராச குமாரத்தியும் பாலசூரிய பிரகாசமான இராசகுமாரனைக் கண்டாள். கண்டவுடனே யிருவரும் ஒருவர்மீதி லொருவ ரிச்சையானார்கள்.

அப்போது ஒருவர்க்கொருவர் பேசக்கூடாதபடியினாலே தானும் வித்தையறிந்தவ ளானபடியினாலே தனது காதிேனாலையைவாங்கி கைநகத்திலெழுதி விபரம் இந்தப்பட்டணத்துக்கு மேலண்டையில் மண்ணோட்டமென்றொரு திருவாசற் சாவடி யிருக்கிறது அதிலே போயிரும். இராத்திரிக்கு உம்மண்டைக்கு வருகிறேனென்று எழுதி அந்த ஓலையை இந்த குமாரன் முன்போட்டா ளவனும் அந்த ஓலையை எடுத்துக்கொண்டு தனக்கு எழுத்துவாசனை தெரியாதபடியினாலே யார் கையிலேயாகிலும் கொடுத்து வாசிக்கச் சொல்லுவோமென்று புறப்பட்டு தன்னிச்சையாய் அந்தத்திருவாசற்சாவடியில்வந்தான் அதிலேயொரு குஷ்டரோகி யிருந்தான். அவனிடத்துக்குப்போய் உமக்கெழுத்துவாசனை தெரியுமோவென்றுகேட்க, அவனும் எனக்கு எழுத்துவாசனை தெரியுமென்று சொன்னான். அந்த ஓலையைக் கையிலேகொடுத்து வாசிக்கச்சொன்னான். அந்த ஓலைக்குள் எழுதியிருந்த விபரத்தை மனதிலே வைத்துக்கொண்டு அந்த ராஜகுமாரத்தியை தானனுபவிக்கவேண்டுமென்று நினைத்து மாறுபடாகச்சொன்னவிதம் ஓராசனே இந்த அனியாயமான பட்டணத்துக்கு ஏன்வந்தீர் இந்தபட்டணத்துக்கு என்ன துடுக்குபண்ணியிருக்கிறீரோ தெரியாது இந்த பட்டணத்துராசா உம்மைக்கண்டவிடத்திலே ஆக்கினைப்பண்ணச்சொல்லி காவலாளிகையில் தனது முத்திரை மோதிரத்தைக் கொடுத்திருக்கிறார் அவர்கள் உம்மைத்தேடிக்கொண்டு திரிகிறார்கள் ஆனபடியினாலே ராஜகுமாரத்தி உம்மை இந்நேரமே புறப்பட்டு ஓடிப்போகச்சொல்லி எழுதியிருக்கிறாளென்று சொன்னான். அந்த விசேஷத்தை இராசகுமாரன்கேட்டு இது அநியாயமாயிருக்கின்றதே நாம் என்னபாவஞ் செய்தோமென்றவ்விடம் விட்டு புறப்பட்டு பயந்தோடிப்போனான். அதன் பிறகு

குஷ்டரோகியு மெழுந்திருந்து ஒரு கிளிஞ்சலோட்டை யெடுத்துக்கொண்டு குளக்கரைக்குப் போய் உடம்பு குளித்து உடம்பிலே யிருக்கிறசொறிப் போகும்படியாகக் கிளிஞ்சலோட்டினாலே நன்றாகச் சுறண்டிப்போட்டு இலுப்பைபுண்ணாக்கும் மஞ்சளும்போட்டு தேய்த்துக் குளித்து நன்றாக சுத்திப்பண்ணிக்கொண்டு தன்னுடைய கீழ்த்துணியைத் தப்பியுலர்த்திக்கொண்டு இருட்டின்பிறகு அந்தச்சாவடியிலே வந்து ஒரு மூலையிலே படுத்துக்கொண்டிருந்தான். இராஜகுமாரத்தியு மன்று ராத்திரி இராஜகுமாரனுக்குச் சாப்பாடும் அதற்கேற்ற பதார்த்தங்களும் கந்தகஸ்தூரி பரிமளாதிகளும் ஆடையாபரணங்களும் ஒரு பெட்டியில் வைத்துக்கொண்டு பெட்டியை மூடி முத்திரித்து அந்தப் பெட்டியை யொரு தாதிதலைமீ தெடுத்துக்கொண்டு உப்பரிகைக்கு நூலேணி விட்டிரங்கி யொருவரு மறியாமல் இருவரும் புறப்பட்டு அந்த திருவாசற் சாவடியிலே வந்து பார்க்குமளவில் மூலையிலே படுத்துக்கொண்டிருக்கிறவனைக் கண்டு பகல் நாம்கண்ட ராசகுமாரனென்று ஆசையாகிய காமாந்தகாரத்தினாலே ஓடிவந்து மூலையிலே யிருக்கிற குஷ்டரோகியை கட்டிக்கொண்டாள். கட்டிக்கொண்டவுடனே அவனுடம்பு இவளுடம்பிலே பட்டமாத்திரத்தில் சீழு இரத்தமுங் கப்படிக்கிற நாற்றமும் துணியெல்லாம் நனைந்து தண்ணீர் வந்து அத்திப்பாலு தோய்ந்ததுபோலவும் உடம்பிலே யிருக்கிற சொரிகள் பலாக்காய்முள்ளு தைக்கிறதுபோலவும் இப்படியாக விருந்ததுகண்டு இவள் சிசுயானபடியினாலே இந்த வேஷ்டை பொறுக்காமல் இவன் பகல் நாம்கண்ட ராசகுமாரனல்ல ஏதோ கபடமாச்சுதென்று ஏங்கி சீவனை விட்டாள். அதைக் கூடவந்த தாதி கண்டு பயப்பட்டுக் கையுங்காலும் நடுக்கமெடுத்துக் கொண்டு என்னசெய்யப்போகிறோம் தெய்வமே யிந்த சேதி ராசா அறிந்தால் நீங்களிந்த நேரத்தில் இங்கே வந்த காரிய மென்னவென்று நம்மை ஆக்கினைபண்ணுவாரென்று மிகவும் பயந்து பெட்டியிலே போட்டுக் கொண்டு வந்த பதார்த்தங்களை யெல்லாங் குஷ்டரோகி முன்னே கொட்டிப்போட்டு அந்தப் பெட்டிக்குள்ளே பிணத்தைப் பிடித்துப்போட்டு கட்டிக்கொண்டு முன்

வந்த வழியே ஏறப்பட்டு நாலேணிமேலேறி உப்பரிகைக் குள்ளேபோய் கட்டிலின்மீது பிணத்தை படுக்க வைத்து அதைக் கொண்டுபோய் ராசாவுடனே சுவாமி என்னமோ தெரியாது இருந்தாற்போலிருந்து தங்கள் குமாரத்தி மறித்துப் போயினளென்று சொன்ன வந்த விசேஷங் கேட்டு ராசாவானவன் ஓடிவந்து பார்க்குமளவில நிசமாய் மரித்திருப்பதைக் கண்டு என்ன/காரணமோ விஷந்தீண்டிற்றோ இல்லை என்று பேய் பிசாசுகளறைந்து கொன்றதோ ஏதென்றுங் காணப்போகாதென்று வெகுவாய் துக்கித்துக்கொண்டு பொழுது விடிந்த பிற்பாடு பெண்ணைத் தகனம் பண்ணச் செய்யுங்கள் கடனெல்லாஞ் செய்து முடித்து அதன்பிறகு பின்னையுஞ் சிலநாளைக்கு பிற்பாடு முன்னாலே பயந்தோடிப்போன இராசகுமாரன் இந்த ராசகுமாரத்தி இறந்துபோன விசேடங்கேட்டு கேள்விப்பட்டு அவனுக் கப்போது நினைவுவந்து நமக்காக மரித்தவள் போலே யிருக்கிறது குஷ்டரோகி மோசம்பண்ணி பயமுறுத்தினதை நானறியாம லோடிப் போனேனே யென்று மிகவும் விசாரப்பட்டு அந்தப் பட்டணமே வந்து அன்றிராத்திரி சாவடியிற்போய் விஷத்தை வாங்கிக்கொண்டுசெத்தான் பொழுதுவிடிந்தபிற்பாடு அங்கே யிருக்கிறபேர் செத்திருப்பவனை கண்டாரோ பரதேசி செத்துப் போனானென்று மயானத்திற் கட்டைகள் கொண்டுபோய்ப் போட்டு அந்தக்கன்னியை தகனம் பண்ணினவிடத்திலே இவனையுமெடுத்துக் கொண்டு போய்த் தகனம்பண்ணிப் போட்டார்கள்.

பிற்பாடிந்த இரண்டுஆவேசமு மந்தச்சாவடியிலே தங்கள் தங்களிச்சை ஒன்றோடொன்று சேராமல் ஆவேசமொரு மூலையிலிருக்கும் பெண்ஆவேசமானது அந்த சாவடியிலே ஒருத்தரையுஞ் சேரவொட்டாமல் பயமுறுத்தியிருக்கும் ஆனபடியினாலே ஒருவரு மந்தச்சாவடியிலேவந்து சோர்க ளிப்படி ஒருவருஷகாலமாக இதிலே சஞ்சரித்துக்கொண் டிருக்கிறபோது அதற்கு பிற்பாடு ஔவையார் எங்கேயோ போயிருந்து அந்தப்பட்டணத்துக்கு வந்தாள். வந்தபோது சாயங்காலமாச்சு இன்றைக்கிங்கே இராத்தங்கிப் போவோ

மென்று நினைத்து அவ்விடத்திலிருந்தபேரைப் பார்த்து படுக்க இடங்கிடைக்குமோ வென்று கேட்டாள். அதற்கவள் சொன்னது இந்த பட்டணத்துக்கு மேலண்டையாக ஒரு கிழச்சாவடியிருக்கிறது. அதிலே ஓர் பிசாசு யிருந்துக்கொண்டு அதிலே வந்தவர்களையெல்லாம் மறித்துப் போடுகிறது ஆகையினலே ஒருவரும் அதிலேசேர பயப்படுகிருர்களென்று சொன்னார்கள். ஔவையாரானவள் இந்த விசேடங்கேட்டு பேயைப் பேயடிக்கப் போகிறதோவென்று வந்து படுத்துக் கொண்டாளந்நேரம் ஆவேசம் அங்கேயிராமல் வெளியிற் போயிருந்தது. ஔவையார் படுத்துக்கொண்டிருக்கிறதைக்கண்டு மிகவும் ஆங்காரத்துடனே யெற்றென்று அறைய வருவதைக்கண்டு ஔவையாரும் அநந்தல் நீங்கி விழித்து அருளிச்செய்த,

வெண்பா

வெண்பாவிருகாலிற் கல்லானைவெள்ளோலைக்
கண்பார்த்துக கையாலெழுதானைப்-பெண்பாவி
பெற்ருளோபெற்ருள் பிறர்நகைக்கப்பெற்ருளோ
பெற்ருேமற் றெற்ருேமற் றெற்று.

என்று சொல்லக்கேட்டு அந்த ஆவேசம் கல்வி கற்ற பேயானபடியினலே இந்தகல்வியின் பொருளை யறிந்துகொண்டு நம்முடைய பூர்வோத்திரமெல்லாம் அறிந்து சொன்னளிவள் தேவியேசரியென்று பயந்து புறப்பட்டுபோ யிரண்டாஞ் சாமத்திலேயும் எற்றெற்றுவந்த தப்பவும் விழித்துபார்த்தருளிச் செய்தது.

எண்ணாயிரத்தாண்டு நீரிற்கிடந்தாலும்
உண்ணீரப்பெற்ருக் கிடையேபொற்-பெண்ணாவாய்
பொற்ருெடிமாதர் புணர்முலைமேற்சாராரை
யெற்ருேமற் றெற்ருேடித் றெற்று.

என்று சொன்ன ஔவையார் சொல்லைக்கேட்டு மீண்டுபோய் மூன்ருஞ் சாமத்திற்கு எற்றெற்றெற்று வந்தது அப்போதும் ஔவையார் விழித்துப் பார்த்து அருளிச்செய்த,

வெண்பா.

வானமுளதான் மழையுள்தான் மண்ணுலகிற்
ருனமுள தாற்றகையுளதால் ஆனபொழு

தெய்த்தோ மிளைத்தோமென்றே மநந்திருப்போரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

என்று சொல்லக்கேட்டு மீண்டுபோய் நாலாஞ் சாமத்திலும் எற்றெற்றெற்று வந்தது அப்போதும் ஒளவையார் அருளிச்செய்த,

வெண்பா

கருங்குளவிசூரைத்தூறிச் சங்கனிபோல்
வருந்திரைக்கொன்றீயார் தன்வாழ்க்கைஅரும்பகலே
இச்சித்திருந்தேபொருள் தாயத்தார்கொள்வாரே
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

என்று சொன்னவுடனே இந்த நாலுசாமத்துக் கவியும் பார்த்துக்கொண்டு இந்த ஒளவையாருடைய அனுக்கிரகத்தினலே கதிபெறலாமென்று பூர்வ ராச குமாரத்தியாக வடிவுகொண்டு ஒளவையார் பாதத்திலே சாஷ்டாங்கமாக தெண்டனிட்டுக் கைகட்டி வாய்புதைத்து நின்றபோது ஒளவையா ரந்த ஆவேசத்தை பார்த்து இதின்வாய்பிறப்பை கேட்கவேண்டுமென்று கேட்டபோது அந்த ஆவேசமான இராசகுமாரத்தி சொல்லுவாள் ஏலங்குழலியென்று சொல்லுவார்கள் நானும் எனதுதோழிமாருமாக உப்பரிகையின் மேலே யிருந்து பந்தடித்துக்கொண் டிருக்கிறபோது மறுபட்டணத்து ராஜகுமார னிந்தபட்டணமே வந்து உப்பரிகையினேரத்திலிருந்து என்னைப்பார்த்தான் நான் அவனைப் பார்த்தேன் பார்த்து இச்சையானபடியினலே என்காதினேலையைவாங்கி கைநகத்தா லெழுதி அவன் முன்னேபோட்டே னவன் எழுத்தறியாதபடியினலே இந்தச்சாவடியில் ஒரு குஷடரோகியிருந்தான் அவன்கையிலந்த ஓலையைக்கொடுத்து வாசிக்கச் சொன்னனந்த ஓலையிலிந்த விவரத்தை மனதிலேவைத்துக்கொண்டு என்னை மோகிக்கலாமென் றெண்ணிக்கொண்டு அந்த இராஜகுமாரனை பயமுறுத்தி யோட்டிவிட்டானந்த குஷ்டரோகி இந்தச்சாவடி மூலையிலே படுத்துக்கொண்டிருந்தான். அதை யறியாமல் கட்டி அவனை முகந்து கொண்டேன் அவன் சரீரவேஷத்தை பார்த்து அந்த ராஜகுமாரனல்லவென்று அங்கே சீவனை விட்டுவிட்டேனம்மாவென்று சொல்லக்கேட்டு ஒளவையாரும்

நல்லதிப்போதுனக் கென்ன வரம் வேண்டுமென்று கேட்க ராஜகுமாரத்திசொல்லுவாள் நான் மறுபடியும் ஜனனமெடுத்து நல்லசெல்வவதியாய் நானுசைப்பட்ட ராஜகுமாரனே எனக்கு புருஷனுகவும் நானவனுக்கு பாரியாகவுஞ் சிறிதுகாலம் கூடி வாழ்ந்திருந்து அப்பால் கதியையடையத்தக்கதாக வரந்தர வேண்டுமம்மா வென்று பின்னேயுந் தெண்டனிட்டு நின்ருள். ஔவையாருஞ் சந்தோஷப்பட்டுச் சொல்லுவாள் நீ செய்த விசேஷங்கேட்டு அந்த ராஜகுமாரனுமுனக்காக வந்திந்தச்சாவடியிலே விஷத்தைத்தின்று செத்தானந்த ஆவேசமு மிங்கேதானே யிருக்கிறதென்று சொன்னுளந்த விசேஷத்தை ஆணுவேசங்கேட்டு ஔவையார் நம்மையு மறிந்துச்சொன்னு ளிவள் ஈஸ்வரிதானெனை ஆணுவேசம் முன்னிருந்த ராஜகுமாரன் வடிவமாக வந்து ஔவையார் பாதத்திலேவிழுந்து சாஷ்டாங்கமாக தெண்டனிட்டுநின்ரு னப்போது ஔவையார் பெண்ணுவேசத்தைப் பார்த்து இவனுக்குதானே நீ ஆசைப்பட்டதென்றுகேட்க ஆமம்மாவென்று சொல்லி அதன்பிறகு அந்த பெண்ணுவேசத்துக்கு ஔவையார் அனுக்கிரகம் பாலித்தவிவரம் உனக்கு பிரமதேவன் விதித்தது ஐம்பதுவயதுண்டு அதிலேபனிரண்டு வயது கன்னியாயிருந்தாய் ஒருவருஷம் ஆவேசமாயிருந்தாய் ஆக பதின்மூன்று வயதுசென்றது இன்னமுனக்கு ஆயுசுமுப்பத்தேழு வருஷமிருக்கின்றது.

இதிலே உனக்கு இருபத்தைந்து வயதளவுங் கன்னிகழிய காரணமில்லை ஆனபடியினுலே தெற்கே உறையூரென்றெரு பட்டணமுண்டு அதிலே கரிதார்ச் சோழன் இராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கிருனவனிடத்திலே ஆலாத்திப்பெண்கள் பன்னீராயிரம் பெண்களுக்கு முதல்வியான மரகதவடிவி என்றெருபெண் ணுண்டு. அந்த மரகதவடிவி வயிற்றிலே நீபோய் வெகு எவ்வர்ணரூப சவுந்தரியத்துடனே பிறக்கப்போகிருய் நீ பிறந்தவுடனே பட்டணமெல்லாஞ் செண்பகப்பூ வாசனை பரிமளிக்கும்போது சோழராசன மகள் அதிசயப்பட்டு உன்னேச் சண்பக வடிவியென்று பேரிடுவாள். அந்த பேரைக்கொண்டு வளருகிறநாளை

யிலே உன்னுடைய ரூபாதிசயத்தைக் கேள்வியுற்று சந்தோஷப்பட்டு சோழமகாராசனுனவன் நீ பிறந்த போது பிள்ளையும் பெண்ணையும் பிறந்ததுண்டோ என்று விசாரிக்கும்போது பன்னீராயிரம் பெண்குழந்தைகள் பிறந்திருக்கிறதென்று சொல்லுவார்கள் அந்தப் பெண்களையு முன்னையுமெடுத்து கொண்டுவரச் சொலலிலட்சணக்காரரை யழைப்பித்து லட்சணம்பார்க்கச்சொல்லி யவர்களப்போ துன்னைப் பெற்றதாய் மரகத வடிவை யழைப்பித்து உன்னை நன்ருக வளர்க்கச் சொல்லி கட்டளையிட்டு உன்னை அஞ்சுவயதிலே பள்ளிக்குவைத்து சகலமான கல்வியையுங் கற்பித்து ஏழு வயதிலே ஆடல்பாடலுங் கற்பித்திருக்கிற நாளையில் பனிரண்டுவயதும் பக்குவமாய் வெகு ரூபலாவதியாயிருப்பாய் ஒரு நாளையதினத்தில் சோழராஜனுன்னை யழைப்பித்து நீ கற்றிருக்கிறவத்தை ஆடல்பாடல்கள் எல்லாம் பார்ப்பான் தமிழில் வெகு மிச்சமாயிருப்பாய் ஆனபடியினலே சோழமகாராஜன் சந்தோஷப்பட்டு இவள் தமிழுக்குரியவனென்றும் இன்றுமுதற்கொண்டு சண்பகவடிவு யென்கிற பெயரை வேண்டாமென்று மாற்றித் தமிழறியும் பெருமாளென்று பெயர் கொடுத்திருக்கச்சே சோழமகாராசனுடனே சொல்லிக்கொள்வாய் ஐயாவே என்னுடன் கவிப்பிரசங்கம்பண்ணி என்னிலும் கவி மிச்சமானவனை சேருவே னுகாதபேர்களைத் தள்ளிவிடுவேன் எப்படிக்கொற்ற மன்னர் மண்டலீகர்வந்தாலும் வந்தவர்கள்கையில் முந்தி ஆயிரம்பொன் வாங்கிக்கொண்டு அதன் பிறகு ஒரு கவியைச்சொல்லி அந்த கவிக்குப் பொருள் சொல்ல, வகையறியாவிட்டா லவனையடித்து ஒட்டிவிட்டு கன்னிகழியாம லன்றைக்காயிரம் பொன் வாங்கிக்கொண்டு உண்டு சுகித்திருப்பேனென்று சொல்ல அப்போது இராஜாவுஞ் சந்தோஷப்பட்டு அப்படியே நீ கீர்த்தியடைந்திருந்தால் போதும்போது மென்றுசொல்லி அப்போதுனக்கு வேறே அரண்மனைக்கு ஏழு மதிலும் அறுபத்துநான்கு வாசல் வாசலுக்குவாசல் விநோதம் பண்ணியிருக்கிற வாசலுங் கற்றுச் சொல்லி பெண்களிருக்கிற வாசலுஞ் சூத்திரப்பதுமையிருக்கிற வாசலும் புலியிருக்கிறவாசலுங் கரடியிருக்கிற வாசலும் யானை

யிருக்கிற வாசலும் குரங்கிருக்கிற வாசலும் வேட்டை நாயிருக்கிற வாசலுங் கிணறிருக்கிற வாசலும் அந்தக் கிணற்றிலே விழுந்தால் சூத்திரப் பலகைமேலே மூடிக் கொள்ளவும் அதுகடந்து அப்புறம்போனால் குங்குமச் சேறிருக்கிற வாசலும் அந்தக் குங்குமச் சேற்றைக் கடந்தவன் கால்கழுவ ஆழாக்கு பனிநீர் வெள்ளிதட்டில் அக்கரையிலே வைத்திருக்கிறதுஞ் சித்திரமண்டபங்களும் பாரதம் இராமாயாணம் அரிச்சந்திரன் கதை நளராஜன் கதை இப்படிக்கொத்த விசித்திரங்களெழுதியிருக்கிற மண்டபங்களும் நீராழி மண்டபமும் பளிங்குமாமண்டபமும் தமிழறியும் மண்டபமும் இயலறி மண்டபமும் இசையறி மண்டபமுங் கூத்துப்பார்க்கிற மண்டபமும் இவைகளெல்லாம் அமைப்பித்து இதற்கப்பால் கோழியுடனே சேவலைக் குத்து விடுகிற வாசலும் ஆட்டுக்கடாக்களைப் பாய்ச்சலுக்கு விடுகிற வாசலும் நாடகசாலை வாசலும் அப்பால் நடுமத்தியிலே வெகு அலங்காரமான கச்சேரி மண்டபமும் அதன்மத்தியிலே கெளிற்றியானைத் தந்தக்கட்டிலும் பெட்டையானைத் தந்தக் கட்டிலுந் தூங்குமஞ்சயாகச் சோடித்து அந்தக் கட்டிலைக் கால்மாடு தலைமாடு தெரியாத பாவனையாகப் போடுவித்துத் தலைமாட்டிலே நிலைக் கண்ணாடியும் கால்மாட்டிலே சூத்திரப் பதுமைகளும் ஸ்தாபித்திருக்கும் அந்தக் கட்டிலின்பேரில் கால்மாடு தலைமாடறிந்து படுத்துக் கொண்டால் அந்தப் பிரதமைகளிலொன்று கால்பிடிக்கவும் ஒன்று கைபிடிக்கவும் ஒன்று விசிறியெடுத்து விசறவும் சிறிது பாக்கு வெற்றிலை மடித்துக்கொடுக்கவும் சிறிது தம்பலப்படிக்க மேந்தவும் இப்படி யனேககாலம் பண்ணிக்கொண்டிருக்கும் ஒருவேளை வகையறியாமல் வந்து கால்மாட்டிலே தலைவைத்துக் கொண்டால் அந்தச் சூத்திரப்பதுமைகளொன்று தலையை வளைத்துப் பிடிக்கும் ஒன்று மூத்திரம் பேயும் ஒன்று தலையைச்சிறைக்கும் ஒன்று சாணியைக் கொண்டுவந்து தலைமீதில்வைக்கும் ஒன்று விளக்கேற்றிவைக்கும் இப்படி வேண்டிய விகடங்களெல்லாமுண்டுபண்ணி வைத்து உனக்கு பச்சை பல்லக்குங் கட்டளையிட்டு நீ பிறக்கச்சே பிறந்த பன்னீராயிரம் பெண்களையும் உனக்குச் சேவிக்கத்தக்கதாகக் கட்டளைபண்ணி

ரதகஜதுரகபதாதிகளையு நியமித்து இவைகளெல்லா முனக்குச் சரிசமானமாக விருக்கப்பட்ட தோழிமார்களில் இயலறியும் பெருமாளென்றும் இசையறியும் பெருமாளென்று இரண்டு பேருண்டு அந்தத் தோழிமாரும் நீயுமாகப் பல்லக்கி லேறிக்கொண்டு ஆடல்பாடல் மேளதாளங்கள் முதலாகிய வெகு ஆடம்பரத்துடனே காலைப் போதிலும் நல்ல மத்தியான காலத்திலும் சாயங்காலத்திலும் இந்த மூன்று நேரமுஞ் சோழ மகாராஜன் கொலுவிற்குப் போய் ஆடல்பாடல் முதலியவைகளைச் செய்து திரும்புப்படியாகக் கட்டளை செய்து பகலுக்கு மிராத்திரிக்கும் பொழுது போகும்படியாகத்தகும் கதைகளைக் கேட்கவும் சகலவேத புராணங்களெல்லாங் கேட்கவும் அரதேசி பாதேசிகளுக்கும் அன்னம் பறிமாறவும் அஞ்சானமாறவும் போசனம் பண்ணவும் ஆடையாபரணந் தரிக்கவும் கேளிக்கைபார்க்கவும் பளிங்குமாமண்டபத்தில் ஒருசாமம் நித்திரை பண்ணவும் இப்படி சகலவித வாடம்பரங்களும் பொருந்தி யிருக்கத் தக்கதாக சோழராசாவானவர் உண்டு பண்ணுவார்.

அந்தப் பிரகாரம் இந்த மூப்பத்தெட்டு வயதளவும் நீ கன்னிகழியாமல் வெகுயோகசாலியா யிருப்பாய் அந்தக் காலத்தில் இராஜகுமாரனும் அந்த பட்டணத்திலே ஒரு விறகு தலைவன் மனைவி வயிற்றிலே பிறந்து பெரியவனாகி விறகுவிற்று வயிறு வளர்த்துக்கொண்டு திரிவான் இப்படியிருக்கிற காலத்தில் ஒருநாள திகாலையில் கடைத்தெருவில் விறகுசுமையை சாத்திவைத்து விட்டு அங்கே யுட்கார்ந்துக்கொண் டிருப்பான் அந்தச்சமயத்தில் நீ யுனது தோழிமார்களுடனே வெகு ஆடம்பரங்களோடு சோழமகாராஜன் கொலுவுக்குப் போய் அங்கே ஆடல்பாடல் செய்து கொலுவை விட்டுத் திருப்பி நீ அரண்மனைக்கு போகிறபோது கடைத்தெருவின் வழியாக வருவாய் அப்போதிந்த விறகு தலைபன் நீ வருகிற வேடிக்கையைப் பார்த்துக்கொண் டிருப்பான் நீயுமவனைப் பார்ப்பாய் இப்படி ஒருவர்க்கொருவர் பார்த்தவுடனே நீ உன் பக்கத்திலிருந்த தோழிகளையழைத்து அந்தக் கடையிலிருக்கிறவனைப் பாருங்கள் பாசிப்பல்லும் பூதமுகமும் வெந்த வீட்டுக்

கழிமரம்போலே காலுங்கையும் அரையிற்சுற்றிய கொடியும் அதிலே சொருகிய அரிவாளு மூடையவனாகவும் இருக்கிறான் இப்படியுமொருவ னுலகத்திலிருப்பானோ இவ்வளவு லட்சணத்தோடிருக்கிறவனையும் ஒருபெண் பிள்ளையும் சேருவாளோவென்று கேட்பாய் அதற்குத் தோழியானவள் அம்மா அப்படியேன் சொல்லுகிறாய் யூசியுமல்லவோ ஒரு சரட்டைக் கோத்துக்கொண்டிருக்கிறது ஆதலால் இவனுக்கு உலகத்தில் ஒருத்தி யிருப்பாளென்று சொல்லுவாள் அந்த வசனத்தைக் கேட்டு நீயுமவனைப்பார்த்து காறியுமிழ்வாய் ஆதையந்த விறகுத்தலையன் கண்டு ஸ்திரீ ஜாதியான யிவள் நம்மைப் பார்த்து காரியுமிழவேண்டிய காரணமென்ன ஆண் பிள்ளை எப்படியிருந்தாலென்ன நல்லது எப்படியாகிலும் ஆயிரம்பொன் சேகரித்து இவளுக்குக்கொண்டு போய் கொடுத்து இவளைசேராமற் போவேனேயாகில் நான் ஆண்பிள்ளையாவேனோவென்று மனதில் பிரதிக்கினைசெய்துக்கொண்டு தன் வீட்டுக்குப்போய் அதற்கு தகுந்தபேர்களுடனே தன் குறையைச்சொல்லி ஆயிரம்பொன்னுஞ் சேகரித்துக்கொண் டுன்னரண்மனைக்கு வருவான் அப்படி வந்தவன் கையி லாயிரம் பொன்னையும் நீவாங்கிக்கொண்டு பிறகொரு கவியைச்சொல்லுவாய் அந்த கவிக்குப்பொருளறியாமல் விழிப்பான் அப்போது அடித்து ஓட்டிவிடுவா யந்தப்பட்டணத்திலே அவனுக்கு முன்வந்து கையிலகப்பட்டுப்போன பேரிருப்பார்களல்லவா? அப்படிப்பட்டவர்களண்டைக் குப்போய் முறைய மிடுவானதற்கவர்கள் அடாபயித்தியக்காரா! நீ ஐயாயிரம் பொன்னல்ல பதினாயிரம் பொன்கொடுத்தாலும் உன் காரியமாகப் போகிறதில்லை அவளுடன்கவிசொல்லி யுத்தப்பிரசங்கம் பண்ணத்தக்கினவர்கள் இங்கொருவருமில்லை அவளைவெல்லுதற்கு எவர்களாலுமுடியாது ஆகையால் கவிசொல்லி கல்வி வல்லமையினால் செயித்தால்மாத்திரம் நீநினைத்த காரியமுடியும் மற்றபடிக்குக் காரியமாகப்போகிறதில்லை நீயுஞ் சமர்த்தனானால் மதுரையிலே பாண்டியராசாவினுடைய சங்கத்தார் 49-பேரிருக்கிறார்கள் அவர்களிடத்திற்குப்போய் முறையிட்டுக்கொண்டால் அப்போதே தாவதொருவேளை அவர்கள்வந்து அவளுடன் தர்க்கஞ்

செய்தால் செய்வார்க ளில்லாவிட்டால் இங்கேயாரு மவளுக்கெதிராளி யில்லை. ஆகையால், அவ்விடம் போம் பிள்ளாயென்று சொல்லுவார்கள் அப்போதிந்த விறகுதலையனும் மதுரைக்குப் போய்ச் சங்கத்தாருடன் முறையிடுவான்.

அதுகேட்டு நற்கீரர்வந்து ராத்திரிபொழுதெல்லா முன்னுடன் பிந்திவாதித்துன்னைத் தோற்கடித்துத் தமிழறியும் பெருமாளென்கிறபெயரை மாற்றிவைத்து அதன்பிறகு விறகுதலையனுக்கு உன்னைவிவாகஞ்செய்து வைத்துப்போவார் அப்பால் உனக்கு பிள்ளையும் ஆயுசு பன்னிரண்டு வயதுண்டு அந்தப்பன்னிரண்டு வருஷ மும் நீங்களிரண்டுபேருங்கூடி வாழ்ந்திருந்து அப்பால் நீங்கள் கதியடைந்து வாழ்வீர்கள் போங்களென்று ஒளவையார் வரங்கொடுத்தாள் அதுகேட்டு இரண்டா வேசமும் சாஷ்டாங்கமாக தெண்டன் சமர்ப்பித்து ஒளவையார்கையில் அனுக்கிரகம் பெற்றுக்கொண்டு போனபிறகு அப்பால் ஒளவையாருந் தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தாள்.

இப்பால் பெண்ணுவேசம் உறையூரில் தேவடி யாளான மரகதவடிவயிற்றில் பிறந்தனள் ஆணுவேச மும் அந்தப் பட்டணத்தில் விறகுதலையன் வயிற்றிற் பிறந்தனன் இவளுக்கு தமிழறிவாளென்று பெயருண் டாகி ஒளவையார் வரங்கொடுத்தபடிக்கு முன்னுற் சொல் லிய பிரகாரம் சோழமகாராஜன் முகாந்தரமாய் சகல பிரதிஷ்டைகளு முண்டாயின. இப்படியாக விருக்கிற நாளில் ஒருநாள் பச்சை பல்லக்கின்மீ தேறிக்கொண்டு பனிரண்டாயிரம் பெண்களுஞ் சேவித்துவர பகலிற் பந்தம்பிடிக்க வெண்சாமரம்வீச தோழிமார் இரண்டு பக்கத்திலுந் தாவிக்கொண்டுவர, கட்டியக்காரர் கட்டி யங்கூறி யெச்சரிக்கை சொல்லப் பதினெட்டு மேளவாத் திய முழங்கத் தும்புருவீணை கின்னரி சுரமண்டலம் இராவணஸ்திரம் குடமுழா இப்படிக்கொத்த பற்பல விராக சங்கீத முழங்கிவர, வெகு ரூபலாவண்யத்துடன் வாலிபரெல்லாங் கண்டு மூர்ச்சையாய் விழுந்திடவுஞ் சோழமகாராஜன் கொலுவிற்குச் சென்று அவர் திரு முகம்பெற்றுத் திரும்பிவருகிறபோது அந்த விறகுதலை

கடையிற் கண்டு அவளையும் ஒரு பெண்பிள்ளை
நவாளோவென்று காரியுமிழ்ந்தாள். அதை அந்த
ருகுதலையன் கண்டு பளாபளா நன்ருயிருக்கின்றது
வளாகிறதேது சோழமகாராசன்வீட்டு வெள்ளாட்டிப்
பண் இவளெப்படி யிருந்தாலுந் தேவடியாள்தானே
ாம் ஆண்பிள்ளை யல்லவோ நம்மைப் பார்த்து இவள்
காரியுமிழ்ந்த காரணமென்ன இவளுக்கித்தனை கெருவ
மெப்படி வந்தது அவளுடைய காரிய மென்னவென்று
கோபித்துக்கொண்டு என்பங்கில் தெய்வமிராமற் போகி
றதா எப்படியும் ஆயிரம் பொன்னை சேகரித்துக்
கொண்டு இவளண்டைக்குப் போகாமற் போகிறேனே
வென்று சபதங் கூறிக்கொண்டு தன் வீட்டுக்கு முத
லாய்ப் போகாமல் புறபபட்டுக் காட்டிற்போய் விறகு
வெட்டிக்கொண்டு அந்தக் காட்டிலே ஒரு மாமரம் வரு
க்ஷத்திற் கொருபழம் பழுக்கிறது அந்தப் பழத்தை
ஒரு ரிஷிவந்து அறுத்து சாப்பிடுவார் அப்படிக்கொத்த
மாமரத்தின் கீழே இவ்விறகு தலையன் மெத்த வெயி
லானபடியால் வந்து நிழலிலே படுத்துக்கொண் டிருந்
தான். அப்போது அந்த மரத்தின் பழம் பழுத்திருந்
தது அந்தப் பழத்தைக் கண்டு அறுத்து வீட்டுக்கு
போகிறபோது சாப்பிடலாமென்று மடியில் வைத்துக்
கொண் டிருந்தான். வெயில் தாழ்ந்தவுடனே எழுந்
திருந்து போய்ப் பின்னையும் விறகு வெட்டிக்கொண்
டிருந்தான். அன்றைக்கு ரிஷி வந்து மாமரத்தைப்
பார்த்து பழமில்லாததைக் கண்டு வருஷா வருஷந் தப்
பாமலிருக்கிற பழமிப்போது இல்லாமல் போவானே
னென்று அங்கனே சுற்றிலும் பார்க்கிறபோது இந்த
விறகுதலையனண்டையில் விறகு வெட்டுகிற சத்தங்கேட்
டவனிடத்திற் போய் அப்பா! இந்த மாமரம வருஷத்
திற் கொருபழம் பழுக்கும் நான் வந்து பழத்தை
யறுத்து சாப்பிடுகிறது பின்னை யொருவருந் தீண்டுகிற
தில்லை இப்போது அந்தப் பழத்தை காணேம் நீயேதா
கிலுங் கண்டதுண்டோ வென்று கேட்க அந்த விறகு
தலையனு மில்லையென்று சொன்னல் முனீஸ்வரர் சாப
மிடப்போராரென்று பயந்து ஐயா வெய்யலுக்கு போய்
மரத்தின் கீழே யிருந்தேன் அப்போது நான் அந்தப்
பழத்தைக் கண்டறுத்து இதை பிற்பாடு சாப்பிடலா

மென்று மடியில் வைத்துக்கொண் டிருக்கிறே னிந்த
மென்று சொல்லிக் கொடுத்தான் அந்த முனியுஞ்
தோஷப்பட்டு பழத்தைச் சாப்பிடாமல் வைத்து
கொண்டிருந்து நாம் கேட்டவுடனே யில்லையென்
சொல்லாமல் கொடுத்தா னல்லவா? இவனுக்கு ஒ
வரங் கொடுப்போ மென்று அவனை யழைத்து அங்கே
நிற்கின்ற விருட்சங்களைக் காண்பித்து இந்த மரங்க
ளனைத்து முனக்கு சந்தன மரங்களாகக்கடவது இவை
களை வெட்டிக்கொண்டு சென்று விற்றுக்கொள் இந்த
மரங்களினுலே யுனக்கு வேண்டிய ஐஸ்வரியம் வரும்
மகாராஜாஞக விருக்கப்போகிரு யென்று சொல்லிச்
சென்ருர் அதன் பிறகு அந்த விறகுதலையனும் அந்தச்
சந்தன மரத்தை வெட்டிக் கட்டைகட்டையாகத் தறித்
துச் சுமை கட்டிக்கொண்டு அந்தப் பட்டணத்தி லுண்
டான குடிபடைகள் துராதுரைகள் பதாதிகள் மந்திரி
பிரதானி பிராமணர் வர்த்தகர் மற்றுமுள்ளவர்களுக்
கெல்லாம் வீட்டுக்கு வீடு தவிராமல் ஒரு கட்டு விறகும்
ஒரு சந்தனக் கட்டையுமாகப் போட்டு வருவான் முன்
ஞலே விறகுவிற்று அன்றைக்கன்றைக்குக் கூலிவாங்
கிக்கொண்டு போய் வயிறு வளர்த்துக் கொண்டு திரி
கிறவன் முன்பு செய்ததெல்லாம் போய் இப்போது
தமிழறியும் பெருமாள் நிமித்தியமாக பொன் சேர
வேண்டு மென்று கூலிவாங்காமல் பிச்சை யெடுத்து
வயிறு வளர்த்துக்கொண்டு சும்மாய்ப்போவான் ஆராகி
லும் விறகு கேட்டாலுங் கேளாவிட்டாலும் வலியக்
கொண்டு போய் வாசல்தோறுஞ் சந்தனக் கட்டையும்
போட்டு வருவான் ஆராகிலு மழைத்து உனது கூலியை
வாங்கிக்கொண்டு போவென்ருல் எனக்கு வேண்டிய
போது வாங்கிக்கொள்வே னென்று சொல்லிக்கொண்டு
திரிந்தான் இப்படியிருக்கிற நாளையிலே அந்தப் பட்ட
ணத்துப் பெரிய செட்டியார் வீட்டிலிருக்கிற வெள்ளாட்
டியானவள் அன்றைக்குச் சந்தனக் கட்டையை விற
கென்று நினைத்து அடுப்பிலே வைத்து எரியவிடும்
போது அந்தப் பட்டணமெங்குஞ் சந்தனவாசனை கம
கமவென்று பரிமளித்து செட்டியாரும் அதிசயப்பட்டு
மளிகைக் கடையிலிருந்து ஓடிவந்து தன்வீட்டின் மடற்
பள்ளியறைக்குப் போய் அடுப்பிலே யென்னத்தைப்

போட் டெரிவிட்டீர்களென்று சந்தன வாசனை வரு வானேனென்றுகேட்க, அதற்கு வெள்ளாட்டி சொன் னது நானுமென்று சொல்வேன் ஆரோ ஒருவன் வெட் டியான்போலே யிருக்கின்றன அவன் நாள்தோறும் ஒரு சுமை விறகு கொண்டுவந்து போட்டுப்போவான் அவை யெல்லாம் ஒரு மூலையிலே யிருக்கின்றன. அது களிற் கருங்கட்டையாய் இருக்கும்படியான ஒருகட்டை யையெடுத்து விறகென்றுநினைத்து அடுப்பிலேவைத் தேன் இதுதான் விவரமென்றும் இதுவுமல்லாமல் அவன் முன்னாலேவிறகுகொண்டு வந்துபோட்டு அன் றைக்குண்டான கூலியைவாங்கிக் கொண்டு போகிற துண்டு இப்போது என்னமோ தெரியாது கூலிவாங் காமல் விறகைமாத்திரம் போட்டுவிட்டு சும்மாய்ப் போகின்றான் நாங்களவனை யழைத்து கூலிவாங்கிக் கொண்டு போவென்றால் எனக்குத் தேவையானபோது வாங்கிக் கொண்டுபோகிறேன் உங்களுக் கென்ன வென்றுசொல்லி இப்படி கூலிவாங்காமல் ஒருமாதம் நாற்பது நாளாகச் சும்மாய்ப்போகின்றான் அதென்ன மோதெயுயாதையா வென்று சொன்னாள் செட்டியாரந்த விசேஷத்தைக் கேட்டு, விறகுவிற்றுக் கூலிவாங்கிச் சாப்பிடுகிறவன் கூலிவாங்காமற் சும்மாய்ப் போகிற காரணமென்னமோ தெரியாது புதுமையாக விருக்கி றது இதனை விசாரித்து அறியவேண்டுமாதலால் நாளை க்கு நம்முடைய வீட்டு விறகு கட்டிக்கொண்டுவந்தால் அவனை நம்மிடத்திற்கு அழைத்துக்கொண்டு வாவெ ன்றுசொல்ல அவன் முன்கொண்டுவந்த சந்தனக்கட் டையும் பாரத்தைப்பார்த்து சந்தோஷப்பட்டு மாளி கையிலே போயிருந்தார் மறுநாள் காலமேவந்து விற குபோட்டுப் போகிறபோது செட்டியார் வீட்டுத்தாதி கண்டு அந்த விறகுதலையனை யழைத்துக் கொண்டு போய் செட்டியார் முன்புவிட்டாள் செட்டியார் விறகு தலையனைப்பார்த்து நீ யார் பிள்ளாயென்றுகேட்க ஐயா நான் பரதேசி விறகுவிற்கிறவனென்று சொன்னான் விறகுவிற்று வயிறு வளர்க்கிறவனானால் கூலிவாங்கா மற் சும்மாய்ப் போகின்றையே அதென்ன சொல்லும் பிள்ளாயென்றுகேட்டார் விறகுதலையனும் ஐயா எனக் கொரு காரியமுண்டு அந்த காரியத்தை நீங்கள் செவ்

வைப்படுத்திக் கொடுப்பீர்களென்று நம்பி கூலிவாங் காமற் சும்மாய்ப்போகிறேனென்முன் அந்தகாரிய மென்னவென்று கேட்டார் விறகுதலையன் அந்த காரியத்தைச் செட்டியாருடனே சொல்ல வெட்கப் பட்டிருந்தான்.

செட்டியார் நல்லவரானதால் இதை நாம் பராமரிக்கலாகாதென்று மனதி லெண்ணிக்கொண்டு விறகுதலையனைக் கிட்ட அழைத்து பயப்படாமற் சொல்லும் பிள்ளாயென்று கேட்க அப்போது விறகுதலையன் சொல்லுவான் ஐயா நான் கடையிலே விறகுசுமை சாத்தி வைத்துக் கொண்டிருக்கச்சே தமிழறியும் பெருமாள் தோழிமாரும் தானுமாக வெகு உல்லாசத்துடனே சோழராசாவினண்டைக்குப் போய் கொலுமுகங் கண்டு திரும்பி கடைத்தெருவழியாகத் தன்னரண்மனைக்குப் போகிறபோது வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தேனப்போது தமிழறியும் பெருமாள் என்னைப் பார்த்து இப்படி வேஷங் குலைந்திருக்கிறவனையும் ஒரு பெண் பிள்ளையானவள் சேர்வாளோ வென்று தோழியைக் கேட்டா ளதற்குத் தோழியானவள் அவனுக்கு மொருத்தி யுண்டாயிருப்பாளென்முள்.

அந்த விசேஷத்தைக் கேட்டு தமிழறியும் பெருமாளென்னைப் பார்த்து காரியுமிழ்ந்தாள் அதுகண்டு நானும் இவள் நம்மைப்பார்த்து உமிழவேண்டிய காரணமென்ன நாம் ஆண்பிள்ளை எப்படியிருந்தாலென்ன இப்படிக் கொத்தவளையே அனுபவிக்க வேண்டுமென நினைத்து பொன்னுக்கு வழியில்லாதபடியினலே இந்த வேலை செய்துக்கொண் டிருக்கிறேனையா வென்முன் செட்டியாரந்த விசேஷத்தைக்கேட்டு குலுங்கக் குலுங்க நகைத்து இவனிருக்கிற வேஷமென்ன அவளிருக்கிற போகமென்ன தேசதேச ராஜாக்க ளெல்லவரும் வந்தடிபட்டுப் போகிருர்களே இப்படி மூடுக்காயிருக்கிறவ ளண்டைக்கு இவன் போகிறவித மெப்படி ஆனலுமென்ன இவனுடைய அதிஷ்டானுகூல மெப்படியோ அது நமக்குத்தெரியாது இதைநாம் ஏன் தடைசெய்ய வேண்டுமென்று மனதி லெண்ணிக்கொண்டு நல்லது இங்கேயிரும் பிள்ளாயென்று விறகுதலை

யனை மாளிகையிலேவைத்து செட்டியார் தன்வீட்டுக்குப்போய் முன்போட்டிருந்த சந்தன கட்டைகளையெல்லாம் பார்த்து அவைகளை விலைமதிக்கும்போது பதினாயிரம்பொன்னுக்கு அதிகமாகயிருந்தபடியினாலே சந்தோஷப்பட்டு விறகுதலையனை அழைப்பித்து இன்னம் எங்கே விறகுபோட் டிருக்கிறாயென்று கேட்க வீட்டுக்குவீடுதப்பாமற் போட்டிருக்கிறேனென்றான்.

நல்லதென்று சொல்ல செட்டியாரும் இவன்கையிலே விறகு போட்டுக்கொண்டவர்களை யெல்லாமழைப்பித்து அவர்களோடு ஆலோசனை பண்ணிக் கொண்டு இந்த விறகுதலையனை ராஜவடிவாக்க வெகு ஆடம்பரத்துடனே அனுப்பிவைக்க வேணுமென்று எல்லாரும் ஒன்றாகப் பேசிக்கொண்டு நாவிதனையழைத்து விறகு தலையனுக்கு பணிசெய்து சம்பங்கியெண்ணை யிட்டுத் தலைமுழுகப் படுத்தி கடுக்கன்மோதிரம் சரப்பளி வெள்ளி அரைஞாண் மற்றுமுண்டான ஆபரணங்களும் பூட்டி பச்சைவடந் தோவத்திகட்டி பாகைசாலுவை அங்கி நிசாருநடுக்கட்டி இவைகளெல்லாந் தரிப்பித்து திவ்வியமான போஜனமளித்து களபகஸ்தூரி பரிமளாதிகளும் அணியப்பண்ணி பாக்கு வெற்றிலையுங் கொடுத்து எக்காளம் மேளபேரிகை பூரிகைமுதலான பதினெட்டுவகை மேளவாத்தியங்களு முழங்கும்படி செய்வித்து விறகுதலையனை மன்மதவடிவாக்கி பச்சைப் பல்லக்கிலெ வைத்து ஆயிரம் பொன்முடிப்பு கட்டித் தண்டிகையில் வைத்து இரதகஜ துரகபதாதிகள் புடைசூழ சிறிதுபெண்கள்முன் ஆடிக்கொண்டுவர அடப்பக்காரன் வெற்றிலைச்சுருள் மடித்துக் கொடுத்துவர இப்படியாக வெகு ஆடம்பராலங்காரமாக்கிவைத்துப்பட்டணத்துப் பெரியசெட்டியாரும் மற்றுமுண்டான பேரும் இவனைப் பயணம்பண்ணி ஓகோ ராஜாவே தமிழறியும் பெருமாளிடத்திற்குப் போய் வாருமென்று அனுப்புவித்தார்களப்போது விறகுதலையனை இராஜாவுந் தமிழறியும் பெருமாளிடத்திற்குப் போகிறபோது மேளவாத்தியத்தொனி பட்டணமெங்கும் அதிர்ந்து போகத்தக்கதாக முழங்குவித்தான் அதுகண்டு இதேதோ தெரியாது எப்போதும்போலிருக்கவில்லை இன்

றைக்கு மேளவாத்தியம் வெகுவாயடிப்பட்டுவருகிறது இவன் எந்த தேசத்து ராஜாவோ தெரியாதென்று ஆச்சரியப்பட்டு தமிழறியும் பெருமாளும் தோழிமாரும் உப்பரிகையின்மேலேறி சிறிதுநேரம் பார்த்துக்கொண்டிருந்து தாதிகள் மொண்ணச்சிகள் கற்றுச் சொல்லிப் பெண்கள் இவர்களை அழைத்து என்னசொன்னளென்ருல் அந்த இராஜா நம்முடைய தலைவாசலிலே வந்திறங்கி விசுவாசங்கொடுத்தால் வாங்கி வாருங்களென்று சொல்லி தானுந்தோழிமாருமாக உப்பரிகை விட்டிறங்கி தானிருக்குமிடம்போய்ச் சேர்ந்தார்கள் அதன்பிறகு விறகுதலையனன இராஜாவுஞ் ஜெயஜெயவென்று வெகு ஆடம்பரத்துடனே தமிழறியும் பெருமாளுடைய அரண்மனைவாசலிலே வந்திறங்கினன் சிறிது நேரஞ் சென்றபிற்பாடு தன்னேடுகூட வந்தவர்களையெல்லாம் அனுப்பிவிட்டு தானும் அடப்பக்காரனுமாக விருந்தான் அதுகண்டு மொண்ணச்சிகள் கற்றுச் சொல்லிகள்வந் திராசாவே நீர் எந்ததேசமென்ருர்கள் அந்த விறகுதலையனும் நாம் ராஜாக்களல்லவே இவளுடனே நமக்கு பேசவராதே நாம் பேசினல் மோசம் வரப்போகிறதென்று பேசாமல் மவுனமாயிருந்தான் அதுகண்டு இதென்னமோ இவன்வாயைத் திறவாமலிருக்கிருனென்று பின்னையு மிவனைப்பார்த்து பழமொழியோ வென்ருர்கள் அதற்குஞ் சும்மாவிருந்தான் பின்னையும் நீர் என்ன நிறைகுடமோ குறைகுடமோ வென்ருர்கள் அதற்குஞ்சும்மாவிருந்தான் பின்னையும் ஊமையோ செவிடோவென்ருர்கள் அதற்குஞ் சும்மாவிருந்தான் இந்த நான்கு விசேஷத்திற்கும் சும்மா விருந்தபடியினலே மொண்ணச்சிக ளெண்ணிக்கொண்டது இவர் பேசாமலிருக்கிறதெல்லாம் தலைமையாயிருக்கிற தமிழறியும் பெருமாளுடனே பேசிக்கொள்வோம் இவர்களுடனே நமக்கென்ன பேச்சிருக்கிறதென்று எண்ணிக்கொண்டிருக்கிருனென்று நிச்சயித்துக்கொண்டுபேச வகையறியாமலிருக்கிறது அறியாமல் அவளுடனே பேசிக்கொள்வோமென் றிருக்கிருனென்று நினைத்து சும்மாயிருந்தார்கள் பின்னையுஞ் சற்றுநேரத்திற்குப்பிறகு இராஜாவே நீர் எங்களுடன் பேசாவிற்ருனே போச்சு இப்போதிங்கே யாருக்கு

விசுவாசங் கொண்டுவந்தீரென்றார்கள் அதற்கு விறகு தலையன் வாயைத்திறந்து உங்கள் நாச்சியாருக்குக் கொண்டுவந்தேன் அவளுக்குப்பரிய மென்னவென்று கேட்டான் ஆயிரம்பொன் பரியமென்று சொன்னார்கள் நல்லதென்று தண்டிகையிலிருந்த ஆயிரம் பொன்முடிப்பை யெடுத்துக்கொடுத்தான் அதை வாங்கிக்கொண்டுவந்து தமிழறியும் பெருமாள் முன்னே வைத்து நாங்கள் அவனை நான்கு வசனங் கேட்டதும் அதற்கொன்றுஞ் சொல்லாமல் மவுனமாயிருந்ததும் பிறகுகேட்ட வசனத்திற்குப் பொன் கொடுத்ததுஞ் சொன்னார்கள் அதுகேட்டு இவன் மூடனென்றறிந்து தாதிகளையழைப்பித்துப் பொன்னை எடுத்துக்கொண்டு போய் பணநோட்டம்பார்ககிற பெண்கையிற் கொடுத்து பார்வையிடுவித்துக்கொண்டு பொன்னைப் பொக்கிஷப் பெட்டியில் அடக்கம் பண்ணுவித்து அந்த இராஜாவைத் தெருத்திண்ணையிலிருக்கச்சொல்லி யனுப்பினாள் அப்படியே தாதிகள் பொன்னைப் பார்வையிடுவித்து பொக்கிஷப்பெட்டியில்சேர்த்து இராஜாவைத் தெருத்திண்ணையிலிருக்கச்சொல்லிப் போனார்கள் சிறிதுநேரஞ் சென்றபிறகு அந்த இராஜாவைக் கூத்துபார்க்கிற மண்டபத்திற் கழைத்துவரச்சொல்லி யனுப்பினாள்.

அப்படியே யழைத்து வருகிறபோது விறகுதலையனை இராஜாவும் இரண்டாங்கட்டைக் கடந்து இப்பால்வரச்சே அங்கேயிருக்கிற சித்திரங்களையும் மொண்ணச்சிகளையுங்கண்டு மோகித்துத் திகைத்தும் கண்ணிமையாமற்படிக்கு பார்த்துகொண்டிருந்தான் மறுநாள்பொழுது விடிந்தபின்பு அதைவிட்டு அப்பாலே போகப்போகிறபோது அத்தாதிக ளோடோடி வந்து அடாமூடா மோசம் போனாயே பொழுது விடிந்து போயிற்றே இனியுனக் கப்புறம்போகச் செலவில்லை யென்று கடூரமாகப்பேசி பிடரியிலேகுத்தி பழமுறத் தாலடித்து குப்புறத்தள்ளி யோட்டிவிட்டார்கள் விறகு தலையன் அந்த அடியை பட்டுக்கொண்டுபோய் என் கையிலே ஆயிரம்பொன்னை வாங்கிக்கொண்டு சும்மா அடித்து கேட்டு மொண்ணச்சிகள் இதென்ன புதுமை

யாகவிருக்கிறது நமக்கிவன் குலாங்கிஷமொன்றுந்தெரி யாதே இன்றையவரையிலிப்படிக் கூவிப்புலம்பின பேரில்லே இவனுரோ நாமறியோமென்று அவனைத் திரும்பவும் அழைப்பித்து கூவுகிறதென்னவென்று கேட்டார்கள் அதற்கு விறகுதலேயன் சொல்லுவான் எனக்கு ஒப்பசொல்லி யுடன்பட தேவையில்லேயோ சும்மாயடித்து ஓட்டிவிட்டாற் பொருளிழந்த நான் கூவாமலென்ன செய்வேனென்ருனதற்கு மொண் ணச்சிகள் சொன்னது உன்கையிலே பொன் வாங் கிக்கொண்டால் ஒப்புச்சொல்ல வேண்டியதுள்ளது தான் ஆனுலுமென்ன இப்போது நானுனக்கொரு கவி சொல்லுகிறேன் அதற்குப் பயன்சொன்னுல் அப்படியேயாகிறதென்று அவர்களில் ஒருத்தி ஒரு கவி சொன்னுள் அந்தக் கவிகேட்டு அதன் தாத்பரிய மொன்றுந் தெரியாமற் பேய்போல விழித்துக்கொண் டிருந்தான் அதுகண்டு முன்னேயடித்தது பொய் பொய் இப்போயடிக்கிறது மெய்மெய்யென்று பழ முறத்தாலேயும் பழந்துடைப்பக் கட்டையாலுமடித் துக் கழுதையின்மேலேற்றி ஊர்க்கோலங் காட்டி யோட்டிவிட்டார்கள் அந்த அடியைப் பட்டுக்கொண்ட விறகுதலேயனும் பட்டணத்திலேபோய் முன்னுலே தமிழறியும் பெருமாள் கையிலே அடிபட்டுத் தங்கள் தேசத்திற்குப்போக வெட்கப்பட்டுக்கொண டிருக்கிற அந்த ராஜாக்களுடனேசொல்லிமுறையிட்டான் அதை அவர்கள்கேட்டு அப்பா நாங்களும் அவளிடத்தி லிப் படிதான் அவமானப்பட்டு வந்திருக்கிருேம் எங்களு டனே நீயுஞ்சொல்லி முறையிட்டால் ஆகவேண்டிய தென்னவிருக்கிறது அவளுக்காயிரம் பொன்னல்ல பதினுயிரம்பொன் கொடுத்தாலும் பலனென்றுமில்லே அவளுடனே கவி சொல்லிப் பிரதியுத்தரங்கொடுத்து அவளே ஜெயித்தாற் காரியமாகும் இங்கே அம்மாத்திரம் கவிப்பிரசங்கம் பண்ணி அவளே ஜெயிக்கத்தக்கின ஆண் பிள்ளேகள் இந்தக் கடல்சூழ்ந்த வுலகத்திலொருவரு மில்லே அவளுக்கு ஒருவருமெதிரில்லே ஆனபடியினுல் மதுரையில் பாண்டிய ராசாவினிடத்திலே பிரசண்ட வித்துவாம்சராகிய சங்கத்தார் சங்கப்பலகையின்பே ரிலே நாற்பத்தொன்பது பேரிருக்கிருர்கள் அவர்களே

கல்விக்குரியவர்க ளவர்களுக்கு மிஞ்சினவர்களொரு வரும் இல்லையென்று சொல்லிக்கொண் டிருக்கிறார்கள் இங்கே இவளிப்படிப் பிரபலமாய்ப் பேரிட்டுக்கொண் டிருக்கிறதை அவர்களறியார்கள். நீ சமர்த்தனானால் அவர்களிடத்திற்குப்போய் உனது மனக்குறையை முறையிட்டுக்கொள்வாயேயாகில் அப்போது அவர்கள் வந்து இவளைக் கெர்வபங்கஞ்செய்தாற் செய்யலாமே அலலது மற்றொருத்தரால் முடியாது இல்லாவிட்டால் அவளுக்கு இங்கே யாருமெதிரில்லை நீபோகிறதானாற் சீக்கிரமாகப் புறப்பட்டு மதுரைக்குப் போம் பிள்ளா யென்றார்கள் விறகுதலையனும் அந்த விசேஷத்தைக் கேட்டு நான் பொன் தேடப்பட்ட அருமை யெனக் கல்லவோதெரியும் அப்படி நான் வருத்தப்பட்டுத் தேடினபொன்னைக் கொடுத்துவிட்டுச் சும்மாபோவேனோ வென்று வெகு கோபமாய் உடனே புறப்பட்டு மதுரைக்குப்போனான். போனவிடத்திலே சங்கத்தாருக்குப் பாற்குடங்கள் கொண்டு போனார்கள். விறகுதலையன் ஒரு சுக்குமாந்தடியை யெடுத்துக் கையிலே பிடித்துக் கொண்டு குறுக்கேபோய் நீங்கள் யாரடா பாற்குடமே தடா யாருக்குக் கொண்டு போகிறீர்களடா வென்று மறித்தான் அதற்கு இடையர்கள் சங்கத்தாருக்குப் பாற்குடம் கொண்டு போகிறோ மென்றார்கள். அது கேட்டு விறகுதலையனும் சங்கத்தாரேது பாற்குடங் கொண்டுபோகிற தேதென்று பாற்குடங்களைத் தகைந்துபோட்டான் அப்போது இடையர்கள் ப்ரமித்து நின்று இவனாரோ தெரியாது சங்கத்தாருக்கு இதுவரையில் பாற்குடம்போதல் தடைபட்ட தில்லையே பாண்டியாரசர் முதலான பேர்களுமெ சங்கத்தாருக் கொருபோதும் எதிர்வார்த்தை சொல்லக்கூடாதே அப்படிக்கொத்த சங்கத்தாரைச் சட்டைபண்ணமல் அவர்களுக்குப் போகிற பாற்குடத்தை தழைந்தானென்று பயந்து உடனே அதிலொருவன் ஓட்டமாக ஓடிப் போய்ச் சங்கத்நாரைக் கண்டு சுவாமி யெனக்கு யாதொன்றுந் தெரியாது ஒருவன்வந்து தேவரீருக்குக் கொண்டுவருகிற பாற்குடங்களைத் தடுத்துப்போட்டானென்று சொல்ல சங்கத்தாருமந்த விசேஷத்தைக்கேட்டு பிர்மித்து நமது காரியத்துக்குத் தடையுண்டோவென்

றும் அவனெப்படிக் கொத்தவனென்றும் சொல்லிச் சங்கத்தார் இரண்டொருத்தரெழுந்து வெளியிலேவந்து விறகுதலையனைக்கண்டு நீயாரடா எங்களுக்கு வருகிற பாற்குடங்களைத்தடுக்கக் காரணமென்னடா வென்றார்கள் அதற்கு விறகுதலையன் சொன்னது உங்களுக்குச் சங்கத்தா ரென்கிறபேரும் சங்கப்பலகையும் வித்தையாண்மையும் கூடவிருக்கிறதோ எவ்வளவுமில்லாத நீங்கள் எனக்கெம்மாத்திரமென்று தடுத்தேனென்றான் அதுகேட்டு சங்கத்தாரும் இந்தவிசேஷமெதினாலே சொன்னாய் அதனைத் தெரியச்சொல்லவேண்டுமென்றார்களதற்கு விறகுதலையன் சிரித்து பெரியோர்களே திரிசிரபுத்திரன் மேற்றிசையிலிரா நின்ற உறையூர்ப் பட்டணத்தையாளும் சோழராசன் வீட்டு வெள்ளாட்டிப் பெண் தமிழுக்குடையவள் தானே யல்லாமல் தனக் கொருவரும் நிகரில்லை யென்று வேறேயரண்மனைக் கட்டிக்கொண்டு வெகு ஆடம்பரத்துடனே தன் வாசலிலே கட்டிவைத்து தமிழறியும் பெருமாளென்று பேரிட்டுக்கொண்டு எந்தெந்த தேசத்து மண்டலாதிபர் வந்தாலுமவர்கள் கையிலே முந்தி ஆயிரம்பொன் வாக்கிக்கொண்டு ஒரு கவியைச்சொல்லி யதற்கு பொருள் கேட்டுப் பின்பு அந்தக் கவிப்பொருள் தெரிந்து சொல்லாவிட்டா லவர்களை அவமறியாதைசெய்து ஓட்டிவிட்டு கன்னிகழியாமற் சுகித்து வாழ்ந்திருக்கிறாள் இப்படி பேர்பெற்ற ஓர் பெண்பிள்ளையிருக்க உங்களுக்குஞ் சங்கத்தா ரென்கிறபேரு மிருக்கத்தக்கதோ சொல்லுங்களையா வென்றான் அதுகேட்டுச் சங்கத்தாரு மிது மகா நன்றாயிருக்கிறதே நாங்கள் தமிழுக் குரியவர்களென்றும் எங்களுக்கிவ்வுலகத்தி லொருவரு மெதிரில்லை யென்றும் நாங்களெண்ணியிருக்க ஒருபெண்பிள்ளை இப்படி பேரிட்டுக்கொண்டிருக்கிறாளென்றால் இதென்ன ஆச்சரியம் அப்பாலெங்களுக்கென்ன பெருமை யிருக்கின்றது ஆயினும் இன்றையவரைக்கும் ஒருத்தராவது இவ்விதமாக வந்து சொன்னதேயில்லை எங்களிடம் சொல்லி முறையிட்டதுமில்லை நாங்கள் கேள்விப்பட்டது மில்லை இப்போது நீ முறையிட்ட காரிய மென்ன உனக்கேதாகிலும் மனதில் குறையுண்டோ சொல்லுமென்று கேட்டார்கள் அதற்கு விறகு தலையன் தான்

கடையிலே யிருந்ததும் தமிழறியும் பெருமாள் தன் ஹைப் பார்த்துக் காறியுமிழ்ந்ததும் அதற்காக விறகுஞ் சந்தனக் கட்டைகளும் வீடுகள்தோறுங் கொண்டுவந்து போட்டதும் பட்டணத்து செட்டியார் தன்னை இராஜ வடிவாக்கி ஆயிரம் பொன்கொடுத்து வெகு ஆடம்பரத் துடனே அனுப்பிவித்ததும் ஆயிரம்பொன்னையுங்வாங் கிக்கொண்டு ஒரு கவியைச் சொல்லி யடித்து ஓட்டிவிட் ட்து முதலாய் விர்த்தாந்தங்களை கிரமமாகச் சொல்லி ஐயா சங்கத்தார்களே இந்நிமித்தியார்த்தமே உங்களி டத்திற்கு வந்து விண்ணப்பம் பண்ணிக் கொண்டேன் சுவாமியென்று னதுகேட்டு சங்கத்தாரும் இவன் பேச் சை நம்பப்போகாதென்று மனதில்நினைத்து மெய்யோ பொய்யோ விபரமாயறியவேண்டுமென்று அந்தவிறகு தலையனைத் தங்களிடத்திலிருகக வைத்துக் கொண்டு பின்னையொரு மூடனை யழைத்து அவன்கையிலே ஆயி ரம்பொன் முடிப்புக் கட்டிக்கொடுத்து ஒரு கவியு மெழு திக் கொடுத்து அனுப்பிய விபரம்,

வெண்பா.

மின்னேரிடையாய் விலைபேசிவாங்குமது
பொன்னுயிரண்டே போதாதோ—எந்நாளும்
சற்றென்றிராதே சதுராவாங்கியது
பொற்றுடிக்கும்போது புகழ்.

இந்தகவி சொல்லிக்கொடுத் திதற்கென்ன சொல்லி யனுப்புகிருளோ பார்த்துக்கொள்ளுவோமென்று மூட னைப் பிரயாணப்படுத்தி உறையூருக்குப்போய்த் தமிழறி யும் பெருமாளைக் கண்டறிந்து வரச்சொல்லி யனுப்பி னர்கள் அப்படியே யவன் உறையூருக்குப் போய்த் தமி ழறியும்பெருமா ளரண்மனை வாசலிலே நின்றுனப் போது மொண்ணச்சிகள் கண்டு எங்கேயிருந்து வந்தா யென்று கேட்க மதுரையிலிருந்து சங்கத்தாரனுப்பி விக்க வந்தேனென்றுன் என்ன கொண்டுவந்தாயென் ருர்க ளாயிரம்பொன்னும் ஒரு கவியுங் கொண்டுவந்தே னென்று னந்தப்பொன்னையும் கவியையும் வாங்கிக் கொண்டுபோய் தமிழறியும் பெருமாள் முன்புவைத்து ஆரோ ஒருவன் மதுரையிலே சங்கத்தார் கொடுத்தனுப்

பினதாக கொண்டு வந்து கொடுத்தானென்று சொன்னார்கள துகேட்டு தமிழறியும் பெருமாளும் நல்லதென்றந்தக் கவியைப்பார்த்து வாசித்துக் கொண்டிருந்த கவியிலே தன்னை சபித்து எழுதி யனுப்பினார்களென்று கோபத்துடனே அந்தக் கவிக்கு மறுகவி எழுதின விபரம்.

வெண்பா.

ஆடைபருத்தி தருமாகிலங்கொருந்தி
கோடிபருத்திகொண் டுனஞ்செய்வாள்—மூடர்
கவித்திறமையுண்டாகிற் கற்றநூற்கொண்டு
கவிப்பரோசங்கத் தவர்.

என்று இந்தக்கவியுமெழுதி அந்த மூடனிடத்திற் கொடுத்து பொன்னையுங் கொடுத்தனுப்பினாள் அவன் மதுரைக்குப் போய்ச் சங்கத்தாரைக்கண்டு பொன்னையும் கவியையும் அவர்கள் முன்னேவைத்தான் சங்கத்தாரும் அந்தக் கவியைப் பார்த்து ஆ ஆ வெள்ளாட்டி தன்னை சொல்லிக் கொள்வதுவிட்டு நம்மை எல்லாரையும் மூடரென்று கவியெழுதி யனுப்பினாள். அவளண்டைக்குப்போய் கவிப்பிரசங்கம் பண்ணி தோற்கச் செய்து அவளரண்மனையையு மிடிப்பித்து தமிழறியும் பெருமாளென்கிற பெயரையு மாற்றிப் போட்டுவர வேண்டும் வெகு கோபத்துடனே சங்கத்தார் நாற்பத்தொன்பது பேரு மெழுந்திருந்தார்கள் அப்பொழுது நற்கீரர் ஒரு வசனஞ்சொல்லுகிறார் வாருங்கள் சங்கத்தாரே நாமெல்லோரும்போய்க் கவிப் பிரசங்கம் பண்ணி வென்றுவருகிறது நன்மையல்ல பார்த்த பேருக்கு நன்றாயிராது ஒரு பெண்பிள்ளை நிமித்தியார்த்தம் நாற்பத்தொன்பது பேரும்போய் வென்று வந்தார்களாமென்றால் நகைப்புக்கிடமாம் அது எவ்வளவு ஈனத்துவம அதனால் நமக்கு யாதொரு பிரயோசனமு மில்லை நீங்க ளெல்லோரும் இவ்விடத்திலேயிருங்கள் நானொருவனுமேபோய் அவளுடனே பிரதிவாதித்து அவளைத் தோற்கச் செய்து தமிழறியும் பெருமாளென்கிற பெயரை மாற்றுவித்து இந்த விறகு தலையனுக்குத்தானே அவளைக் கலியாணம் பண்ணி வைத்து வருகிறேனென்றார் அதிலே சிறிதுநாள் தமி

ழறிவாளென்கிறபேர் பெற்றிருக்கிறதும் அவள் ஔவையார் வரப்பிரசாதத்தினுல் யாராலேயுஞ் செயிக்கக் கூடாமலிருக்கிறவளென்று நாம் காற்று விசேஷமாய்க் கேள்விப்பட்டிருப்போம் ஆனாலது ஏதோ எவ்விடமோ என்னமோவென்ற சட்டை செய்திருந்தோ'மது இப்போது மெய்யாக விளைந்திருக்கிறதப்படியவள் ஔவையார் கையிலே வரம்பெற்று யாராலேயு மழியப்படாமலிருக்கிறவளை நற்கீரரே நீர்போய் எப்படி செயித்துவருவீரென கேட்டார்களதற்கு நற்கீரர் நான்போயவளை ஜெயித்துவராமற் போவேனேயாகிலின்னபடி என்றுக்கினை செய்துகொண்ட விவரம்.

வெண்பா

சென்றுறையூர்புக்கிச் சேயிழையை நான்கண்டு
வென்றுதமிழழித்து மீளனேல்—மண்ணில்
விருந்திருக்கவுண்ட வெறுவல்யோடொப்பேன்
வருந்துவரோசங்கத் தவர்.

என்று சொல்லக்கேட்டு சங்கத்தாரனைவருஞ் செவிகளைப் புதைத்துக்கொண்டு சிவசிவாவென்று சொல்லிப் பின்பு நல்லதப்படியே போய்வாருமென்று அனுப்பினுர்கள். அப்போது நற்கீரரும் விறகு தலையனை யழைத்துக்கொண்டு மதுரையை விட்டு புறப்பட்டு உறையூருக்கு வருகிறபோது நடுவே காடாந்தகாரமாக யிருந்து அந்தக் காட்டின் வழியாக வரச்சே ஒரு வடதாரி மரத்தின்மேலே வள்ளிக்கொடி படர்ந்திருந்தது அதை ஒரு மேடன் கண்டு மேலே யிருக்கிற சிக்குச் சிறகெல்லாம் அறுத்துப் போட்டுக் கட்டைப்பாறையினுல் வள்ளிக் கிழங்கைப் பெயர்த்துக்கொண் டிருந்தான். அதை நற்கீரர் கண்டு ஒரு கவியாகப் பிணைத்துக்கொண்டு அவளுடனே தர்க்கம்பண்ணி தீராத விதத்திற்கு இதனை யவளுக்குத் தெரியாமற் கண்டசுத்தி பாடித் தோற்கச் செய்வோ மென்று மனதி லெண்ணிக்கொண்டு அப்பாலே போகிறபோது விறகுதலையனை யழைத்து வாரும் பிள்ளாய் தம்பி அவளிருக்கு மரண்மனையின் கட்டுக் காவலென்ன அங்கே யென்னென்ன அதிசயங்க ளுண்டாயிருக்கிறதோ அவைகளை யெல்லாம் விபரமா யெனக்

குத் தெரியச் சொல்லுமென்று கேட்டார் அதற்கு பிறகு தலையன் சொல்லுவான்: ஐயா! அவளிருக்கிற அரண் மனைக்கு ஏழுமதிலும் அறுபத்து நான்கு வாசலும் வாச லுக்கு வாசல மொண்ணச்சிகள் கற்றுச் சொல்லி யது கள் எக்கடத்திகள் சூஸ்திரப் பதுமைகள் யானைகள் புலிகள் கரடிகள் குரங்குகள் வேட்டை நாய்கள் கிணறு குங்குமச்சேறு சித்திரமண்டபத்திற் களிற்றியானைத் தந்தக்கட்டிலும் பெண்யானைத் தந்தக்கட்டிலும் போட் டிருக்குதாம் பின்னையு மென்னென்னமோ விருக்கிற தென்றுஞ் சொல்லுவார்கள் எனக்குச் சொல்லத் தெரி யாது எனக்குத் தெரிந்தமட்டும் அங்கே யிப்படிக் கொத்த விநோதங்களெல்லா மிருக்கின்றன ஐயா வென் றான் அதுகேட்டு நற்கீரர் இன்னமும் விநோதங்கள் அநேகமிருக்கலா மென்று நினைத்துக்கொண்டு பிறகு தலையனை யழைத்து எண்ணசீலை மூங்கிற்கனி செம்பருத் திப்பூ மல்லிகைப்பூ காந்தக்கல் கட்டெறும்பு அலவன் வாழைத்தண்டு கரும்புகருணை எலுமிச்சம் பழம் இவை களை யெல்லாஞ் சேகரித்துக் கொண்டு வாவென்று அனுப்பினார் அப்படியே போய் அவைகளனைத்துஞ் சேகரித்துக்கொண்டு வந்தான். அதன் பிறகு இரு வரும் புறப்பட்டு திருச்சிராப்பள்ளிக்கு வந்து மேற்கு முகமாகத் திரும்பிப் பார்த்தார்கள் உறையூர்ப் பட்ட ணத்திலே தமிழறியும் பெருமாளிருக்கிற உப்பரிகையின் மீதிலே செய்து வைத்திருக்கப்பட்ட பொற்குடந் தோன்றிற்று அதைக் கண்ட நற்கீரரும் பிறகு தலை யனை யழைத்து அதோ பொற்குடந் தெரிகிறதே அது எந்தவூர் எந்த கோபுரமென்று கேட்டார் அது அந்த வெள்ளாட்டி அரண்மனைக்குள்ளே யிருக்கிற உப்பரிகை யின் பேரில் அமைத்த பொற்குடமையா வென்றான் அதுகேட்டு நற்கீரர் பிறகு தம்முடைய மனதிற் பிரதிக் கினை பண்ணிக்கொண்ட,

வெண்பா

இதுவோசிராப்பள்ளி யிதுவோவுரையூர்
இதுவோதமிழறிவ ளெல்லை—யிதுவோ
இறைவளாக்குஞ் சங்கமிவளழிப்பதென்னே
குறைவறத்தான்வெல்லேன் குறித்து.

என்று பிரதிக்கினை பண்ணிக்கொண் டப்பால் உறையூர்ப் பட்டணத்திற் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது சாயங்கால வேளையாச்சுது; அதன்பிறகு நற்கீரதேவரும் விறகுதலையனை யோரிடத்திலே வைத்துத் தமது பச்சைவடந் தோவத்தி பாகை கடுக்கன் மோதிரம் மற்றுமுள்ள ஆபரணங்களை யெல்லாம் விறகுதலையன் வசஞ்செய்து அவனை யவ்விடத்திற் றனே யிருக்கச்சொல்லி யவன் கட்டியிருந்த கரித்துணியை வாங்கித் தலையிலும் அரையிலும் கட்டிக்கொண்டு இரண்டு கொடியைப் பிடுங்கி இடுப்பிலே சுற்றிக்கொண்டு இவ்விதமாக விறகுதலையனைப்போல வேஷம் பூண்டு அந்த மாற்றெல்லா மடியிலே யடக்கமாய் வைத்து வாழைத் தண்டை சுமையாகக்கட்டி தலைமேலே வைத்துக் கொண்டு தமிழறியும் பெருமாளிருக்கிற அரண்மனையை நோக்கி வருகிறபோது, சூரியனஸ்தமிக்கிற சமயமாச்சுது. அந்த வேளையிலே நற்கீரதேவரும் வாழைத் தண்டை விறகாகக் கட்டிக்கொண்டு சமுகச்சாலையிற் போய் முதற்கட்டு வாசலிலே கற்றுச் சொலலிப் பெண்களிருக்கிறதைக் கண்டு பிறகு விலை கூறின.

வெண்பா

வெய்யோன் கதிரெரிப்ப வேற்கண் ணுள்பின் றொடரப்
பையவருந் தென்றற் பயனறியேன்—தய்ய
மலர்ந்தடங்கண் வாய்ந்த மயிலனையீர் கொள்வீர்
விலைக்குவிறகோ விறகு.

என்று கூறினசேதியை கற்றுச்சொல்லி பெண்கள்கேட்டு இதுவரையில் நம்முடைய நாச்சியாருக்கு எதிராளியொருவன்வந்து கவிசொன்னது மில்லையே அந்தக்கவியைக் கற்றுக்கொண்டுபோய் நாமவளுக்குச் சொன்னதுமில்லையே எவன்வந்தாலும் அவனுக்கு நம்முடைய நாச்சியார் கவிசொல்லிப்பொருளறியாதபோது அடித்து ஓட்டிவிடுகிற வழக்கமல்லவோ இது ஏதோ தெரியாது ஆச்சரியமா யிருக்கிறதென்று நினைத்து இந்தக் கவியைக்கொண்டுபோய்த் தமிழறியும் பெருமாளுடனே யாரோ ஒருவன் வாழைத்தண்டைக்கட்டித் தலைமேல் வைத்துக்கொண்டு விறகென்று விலைகூறிக் கொண்டு இந்தக் கவியைச் சொன்னனென்று சொன்

ஞர்கள். அதுகேட்டுத் தமிழறியும் பெருமாள் மறுகவி சொல்லியனுப்பின,

வெண்பா.

உள்ளீரம்பச்சை புகையுமெறியாது
கொள்ளீர்விறகென்று கூறீர்—மெள்ள
வீணரேபோம்போம் வீணரோநீருந்
தாசரேசங்கத் தவர்.

என்றுசொல்ல இந்தக்கவியை கற்று சொல்லி பெண்கள் கற்றுக்கொண்டுபோய் விறகு தலையனுக்கு சொன்னார்க ளதைக்கேட்டு விறகுதலையனுன நற்கீரர் இரண்டாங் கட்டுக்குள்ளே போய்ச்சொன்ன,

வெண்பா.

சாலவுலர்ந்துண்டு சாலகத்தினூற்புகைப்போம்
நீலவிழிமாதர்க்கு நின்றெரியுங்—கோலத்
தலைக்குவலையல் குங்கனங்குழலீர்கொள்ளீர்
விலைக்குவிறகோ விறகு.

இந்தக்கவியைக் கற்றுக்கொண்டுபோய் தமிழறியும் பெருமாளுடனே சொன்னார்க ளதைக் கேட்டவள் இவனைக்கொண்டாடிக் கொண்டிவன் நல்ல வித்வானுமாய் நல்ல லட்சணமறிந்தவனுமா யிருக்கிறுன் கவி வெகு நேர்த்தியாயிருக்கின்ற திதை நாமிரட்டிக்கப் போகா தின்றுவரைக்கும் கன்னிகழியாமற் றேடியுண்டு கீர்த்தியடைந்திருந்தோம் இப்போதிவ னென்ன காரணமாய் வந்தானே தெரியாது இவனம்மைச் சோதிக்க வந்தவனுகக்காணப்படுகிறது ஆனுலென்ன இவனுடைய சமர்த்தெல்லாம் பார்ப்போம் இந்த கட்டுகளெல்லாம் நடக்கச்சே இடைநடுவில் மோசம் போகாமல்வந்து நம்முடனே கவிப்பிரசங்கம்பண்ண நம்மிலும் வல்லவனுகவிருந்தா லப்படிக் கொத்தவனைக் கூடினுல்தானென்ன சந்தேக மில்லை என்றெண்ணிக் கொண்டு மறுமொழி யனுப்பின,

வெண்பா.

பால்பயவெட்டிப் பசுமையுலர்ந்தோ
கால்பட்டுவீழ்ந்துதைந்து கட்டினையோ—சாலப்
புதையுமோவுண்மை புகழ்ந்துரையாய்நீயும்
வகையாகவாசலிலே வந்து.

இந்தக் கவியைக் கொண்டுபோய் விறகு தலையனுக்குச் சொல்ல அவ்விறகுதலையன் மூன்றுங் கட்டுக்குள்ளே போய்ச் சொன்னதாவது,

ஈர முலர்ந்தே யெலும்புபோலேகாய்ந்து
பாரங் குறைந்து பசையுலர்ந்து—நேரே
பிறகொன்று மில்லை பேதையே கையாலே
விறகுதனைக் கொள்க விரைந்து.

இந்தக் கவியைக் கற்றுக்கொண்டுபோய்த் தமிழறியும் பெருமாளுடனே சொல்ல அப்போதந்தத் தமிழறியும் பெருமாள் சொன்ன,

வெண்பா.

விறகோவிறகென்று மேன்மேலுங்கூறும்
விறகுவிற்பான்றன் னருகின்மேவி—விறகு
விலைகேட்டுவாருமென்று மெல்லியலாள்கேட்டாள்
கலைவாய்த்தமிழறிவாள் காண்.

இந்தக் கவியைக் கற்றுக்கொண்டுபோய் விறகுத்தலையனுக்குச் சொல்ல அதுகேட்டு விறகுதலையனை நற்கீரர் நான்காம் வாசற்கடந்து ஐந்தாம் வாசலிலே சொன்னதாவது,

கட்டுவிறகுதலை கன்னியரேகூறக்கேள்
வெட்டுவிறகுதனை வீரனு—ரிட்ட
நறைவர்குழன்மடவீர் நான்கொண்ட
விறகாயிரம்பொன் விலை.

என்று சொல்லிக்கொண்டு ஐந்தாம்வாசல் கடந்து ஆறும்வாசலுக்கு வர, இந்தக் கவியைக் கற்றுச்சொல்லிகள் கற்றுக்கொண்டுபோய்த் தமிழறியும் பெருமாளுக்குச் சொல்ல இவன் நல்லவித்துவானேயென்றுபின்னையுஞ்சொன்ன,

வெண்பா.

பச்சைமுழுதுமெரியாது பாரிடத்தில்
இச்சையிதுவன்றே வியம்பக்கேள்—நிச்சயமாய்
உள்ளவிலைசொல்லுகென வோததெரிந்துவந்து
கிள்ளைகாள்சொல்லீர் கிளர்ந்து.

இந்தக்கவியை கற்றுசொல்லி விறகுதலையனுக்குச்சொல்ல விறகுதலையனு மேழாம்வாசலில் வந்து சொன்ன,

வெண்பா.

ஐந்நூற்றிரட்டிப்பொன் னப்புரமுஞ்சோறுகறி
என்னூர்விறகுவிலை யிப்படியே—முன்னே நான்
சொன்னபடியேயொழியச் சொல்லறியாப்பேதை
கின்னூலிடையாட்குச் செப்பு.

இந்தகவியை கற்றுச்சொல்லிகள்போய் தமிழறியும் பெருமாளுக்குசொல்ல, அதுகேட்டு தமிழறியும்பெருமாளும் விசாரப்பட்டு வருகிறதெல்லாம் வரட்டும்பார்ப்போமென்று கற்றுச்சொல்லிகள் கையிலே ஆயிரம் பொன்னும் படி அரிசியும் மிளகு மிளகாய் கறி முதலானவைகளைக்கொடுத்து இவைகளை அந்த விறகு தலையன் கையிலே கொடுத்தவன் போடுகிற விறகைபோட்டுவித்துக்கொண்டு அவனை அனுப்பிவிடுங்க ளென்று சொல்ல அப்படியே கற்றுச்சொல்லிப் பெண்கள்வந்து அந்த ஆயிரம்பொன்னையும் அரிசி முதலியவைகளையுங் கொடுத்து விறகுபோடென்றூர்கள் அவ்வாறே அவைகளை வாங்கிக்கொண்டு அவர்கள் சொன்னபடியே எட்டாம் வாசலில்போட்டு அங்கேயிருந்துக்கொண்டு கற்றுச்சொல்லிப்பெண்களையழைத்து மறுபடியும் அந்தப் பெண்ணை அரிசி முதலானவைகளையுங் கொடுத்து இந்தப்பொன்னை உங்கள் நாச்சியாருக்கு இராத்திரிக்குப் பரியமாக வைத்துக்கொள்ளச் சொல்லும் அந்த அரிசியைச் சமைத்து நமக்கு ராத்திரிக்குச் சாப்பாடு பண்ணிவைக்கச் சொல்லென்றதற் கொருகவியுஞ்சொல்லி அனுப்பிவித்ததாவது,

வெண்பா.

தந்தபொன்னுமுங்கள் தமிழறிவாட் கேபணையம்
இந்தவரிசிக்கிடுமசனம்—முந்துமொழி
பாகனையசொல்லீர் பகருமிந்தப்பாவையற்குப்
போகன்றூற்கூடாது போ.

என்றுபாடி உத்தரவுடனேகற்றுச்சொல்லிப்பெண்கள் தமிழறிவாளிடத்திற்போய் பொன்னையும் அரிசி முதலான சாமக்கிரயங்களைவைத்து அந்தக் கவியையுஞ்சொன்னூர்கள். அதுகேட்டு அவள் இது என்ன காரணமோ புதுமையாக யிருக்கிறதென்று விசாரப்பட்டுச் சற்றுத்தெளிந்து பின்னையும் கற்றுச்சொல்லு

வாள் அடிப்பெண்களே நீங்கள் பொன்னைக்கொ ண்டுபோய் நமதரண்மனைப் பொக்கிஷத்தில்சேர்த்து விட்டு அந்த அரிசியைத் தொம்பரத்திற்போட்டுச் சமையற்செய்யுங்கள் அந்த விறகுதலையனை நமதரண் மனைப் புறவரைத்திண்ணையி லிருக்கச்சொல்லுங்கள் அதற்கவன் என்னசொல்லுகிருனே அதை நீங்கள் ஒன்றுமறியாதவர்கள் போலக் குருக்குநெடுக்குமாக திரிந்து கேட்டுக்கொண்டு அதிசீக்கிரத்தில் வாருங்க ளென்று சொல்லியனுப்பினுள் அப்படியே அவர்கள் பொன்னை பொக்கிஷத்திலே சேர்த்துவிட்டு அரிசியைத் தொப்பரத்திலிட்டுச் சமைக்க வேலைக்காரர்களுக்கு உத் தரவு செய்துவிட்டு விறகுதலைய னிடத்திற்கு அதிக துரிதமாய்வந்து ஆரையா நீ இந்த புறவறைத் திண்ணையி லுட்கார்ந்திருமெனச் சொல்லிவிட்டு, பிறகு அதற்கென்னசொல்லுகிருனே அதையறிவோமென்று யாதொன்று மறியாதவர்கள்போல குறுக்கு நெடுக்கு மாக திரிந்துக்கொண்டிருந்தார்கள்: அப்போது விறகு தலையனுன நற்கிரதேவரும் தாதிகள் உத்தரவின்படிக் குத் திண்ணமீதி லிருக்கச்சே அந்தத் திண்ணைக்கெதி ராக ஒருபனைமரமும் ஒரு புளியமரமும் ஓரிடத்தில் வளர்ந்து இரண்டு மொன்ருகப் பிணைத்துக்கொண்டி ருக்குந் தருணஞ் சாயங்கால மானபடியினுலே அந்த மரத்தின்மீது ஒரு கொக்கு வந்திறங்கியிருந்தது. அந்தக்கொக்கை நற்கிரர் பார்த்து சொன்னதாவது,

வெண்பா

புலியிலரும்பனையிற் பொன்றலைக் கோகேகே
ளிளமைமொழியாதிருந்தீர்க ளருவ—தேனை
எம்மைப்பிரிந்தவரோ யெம்மிலுந்தாரியரோ
உம்மைப்பிரித்தா ருரை.

என்றுசொல்ல, இந்தக்கவியை கற்றுச்சொல்லிகள் போய் தமிழறிவாளுக்குசொல்ல அதுகேட்டு தமிழறி வாளும் விறகுதலையனுன நற்கிரரை அந்தகட்டை கடந்து ஒன்பதாவது கட்டுக்குள் அழைத்துவரச் சொல்ல அப்படியே இவர்களழைத்துவந்து விட்டார் கள். அந்தக் கட்டுக்குள்ளிருந்து விறகுதலையனுன நற் கிரர் சொன்னதாவது,

வெண்பா

ஊசிமுனையி லொளிமுத்துக்கோத்ததுபோல்
வீசுமணிவந்து மெய்குளிர—மூசு
முலைத்தடங்கண்மாதே முழுவினையேற்கின்று
நிலைக்கடையோ நிச்சயித்தாய்நீ.

என்று சொல்லக்கேட்ட கற்றுச்சொல்லிப் பெண்கள் சிவுக்கென்றுபோய்த் தங்கள் எஜமானியாகிய தமிழறிவாளுக்கு சொல்ல அவள் கேட்டு ஓ பெண்களே அந்த விறகுதலையனை இப்பாலழைத்துவந்து வைக்கோற் படுக்கை போட்டுக்கொடுங்களென்று சொன்னாள் அவர்களப்படியே பத்தாவது கட்டுக்குள்ளே அழைத்து வந்து வைக்கோற் படுக்கைகொடுக்க அந்த வைக்கோலின்பேரிலே ஒரு கந்தையைப் போட்டுப் படுத்துக் கொண்டு விறகுதலையனான நற்கீரர் சொன்னதாவது,

வெண்பா

வைக்கோற்சயனத்தில் வாரிமுன்றுனையின்மேல்
மெய்த்தோல்வருந்திக் கிடவுடம்பே—மொய்க்கு
மதுவொழுகுதபூங் கொன்றைவார்கடையோ
னிற்றையகிதுவோவிதித்த தெமக்கு.

என்று சொன்ன கவியைக் கற்றுச்சொல்லிகள் கொண்டுபோய்ப் பெண்கள சிகரமணியாய்விளங்கும் தமது முத்தமிழறிவாளுக்குச் சொல்ல அவளதைக் கேட்டு எனது அருமைத் தோழிகளே நீங்களவனை இப்பாலழைத்துவந்து சீலைப்பாயும் வைக்கோற்றலையணையும் சேகரித்து கொடுங்களென்றாள் உடனே கற்றுச்சொல்லிகள் அப்படியே போட்டுக்கொடுத்தார்கள். விறகுதலையனான நற்கீரர் பதினோராவது கட்டுக்குள்ளேவந்து அநதப் பாயின்மேற் சயனித்துக்கொண்டு சொன்னதாவது,

வெண்பா

சரசரத்தாயுந் தலையணைவைக்கோலும்
பரபரத்தமச்சினிமார் பணியும்-விறகுடனே
யீங்கிவர்கள்செய்ய மியம்புமிவர் கல்லும்
நீங்காதென் னுஞ்சத்து ணின்று.

என்று சொன்ன கவியை கற்றுச் சொல்லிகள் போய் மின்னற்கொடிபோன்றஇடையையும் பொற்கிண்ணம்போன்ற தனபாரங்களையும் விசேஷகல்வித்திறமையுமுடைய தங்கள் தலைவியாகிய தமிழறிவாளுக்குச் சொல்லி அதுகேட்டு அந்த விறகுதலையனைப் பன்னிரண்டாவது கட்டுக்குள்ளே அழைத்து வந்து ஓரீச்சம் பாயும் தலையணையுங் போட்டுக்கொடுங்களென்று சொன்னாள். அச்சொல்லைக் கற்றுச்சொல்லிகள் சிரமேற்கொண்டு அநத விறகுதலையனை யழைத்துக் கொடுத்தார்கள் அப்பால் விறகுதலையனான நற்கீரர் அதன்பேரிலேயிருந்துகொண்டு சொன்னதாவது,

வெண்பா

குடவன்கடிக்க குளிர்வாடைவீசக்
கிடவென்றுடத்தே கிடந்தே-மடநல்லார்
மென்குறங்கைத்தீண்ட விதியில்லையாதலினா
லென்குறங்கையான்றழுவி னேன்.

என்றுசொன்ன கவியை கற்றுச்சொல்லிகள் போய் தமது அரசியாகிய தமிழறிவாளுக்குச்சொல்ல இவன் நல்ல வித்வானே அற்பமானவ னல்லவென்று எண்ணிக்கொண்டு பதின்மூன்ருவது கட்டுக்குளழைத்து வந்து ஒருநார்க்கட்டிலும் ஈச்சம்பாயும் தலையணையும் போட்டுக்கொடுத்து நம்மிடத்திலே சேவிக்கின்றபெண்களிலே அதிக அழகுடனே ஆடும்பெருமாளை சிங்காரித்து அவனிடத்துக் கனுப்புங்களென்ருள். அப்படியே கட்டிலும் பாயும்போட்டுக் கொடுத்து அதன் பேரிலே விருகுதலையனை யிருக்கச் சொல்லி அந்த அழகுடனுடும் பெருமாளையுஞ் சிங்காரித்தனுப்புவித்தார்கள் அவள்வந்து எதிரே நின்ருள். அவளைப்பார்த்து விறகு தலையனான நற்கீரர்சொன்னதாவது,

வெண்பா

பறிபோலுங்குண்டாத்தாள் தானவளைப்போலே
நெறியாகவந்தென்மு னின்ருய்-சிறுபுலிதான்
தீரப்பசித்தாலுந் தின்னுப்புற்றின்னுமோ
நேராக்கல்லாதே நீ.

என்றுசொன்ன கவியைகேட்டு அவள் தலையை யிறங்கிக்கொண்டுபோய்த் தமிழறிவாளுடனே சொல்

விக்கொண்டானதுகேட்டு தமிழறிவாளும் பதினுலா வது கட்டுக்குள்ளே யழைத்துக் கொண்டுபோய் ஒரு கச்சுகட்டிலும் வீச்சம்பாயும் போட்டுக் கொடுத்து நம்முடைய தாதிகளிலே இரதமோகினியை சிங்காரி த்து அனுப்புங்களென்று சொன்னுள் அப்படியே கட்டி லும்போட்டுக் கொடுத்து அந்தப் பெண்ணையுஞ் சிங்கா ரித்து அனுப்பிவித்தார்கள் வருகிறபோது விறகு தலைய னிடத்தி லெரிந்துக் கொண்டிருந்த விளக்கிருண் டிருந்தது அதுகண்டு இவள்போய் அந்தவிளக்கைக் கையாலே தூண்டி யெண்ணெயைத் தலையிலே தடவிக் கொண்டாள் அதை விறகுதலையனுன நற்கீரதேவர் கண்டு இவள் இந்த வீட்டு வெள்ளாட்டி யென்றறிந்து அவளைப் பார்த்துச் சொன்னதாவது,

வெண்பா

சுள்ளிவிறகு சுமை தலையானுனலு ந்
தெள்ளுதமிழறிவாள் சேராமலுள்ளஞ்
செழும்பாகினுமினிய தேன்சொலாய்கூடேன்
தொழும்பாமுன்னுத்தியுடன் சொல்.

என்று சொன்ன கவியைக்கேட்டு அவளும் வெட் கித் தலையை இறங்கிக் கொண்டு தமிழறிவா ளுடனே சொல்லி கஸ்திபட்டாள். அதுகேட்டு பதினைந்தாவது கட்டுக்குள்ளே யழைத்துக் கொண்டுபோய்க் கட்டில் தூங்குமஞ்சத்தின்பேரில் மெத்தை தலையணையும் சீனி பாயும் போட்டுக்கொடுத்து நம்முடைய தோழிப்பெண் களிலே மதனசேனைக்கு தன்னுடைய வெண்சாமரை யும் பொற்களஞ்சியும் பொன்னின் மிதியடியும் பொற் பட்டாடையும் கொடுத்து சிங்காரித்து விறகு தலைய னிடத்துக்கு அனுப்பிவிக்கச் சொன்னுள். அந்தப் படியே தூங்குமஞ்சனம் போட்டுக்கொடுத்து அந்தப் பெண்ணைச் சிங்காரித்து அனுப்பிவைத்தார்கள். வந்து நின்றபோ தவளைப் பார்த்து விறகு தலையனுன நற் கீரர் சொன்னதாவது.

வெண்பா

ஆடையுடையு மவள்காண்மிதியடிய்
முடியவளாகவந்தென் முன்னின்ருய்—மாடுபோற்

குண்ட நான்சேர்வேனோ கோதையர்கள்செய்திதனை
கண்டேன்கண்டேனுக் கணக்கு.

என்று சொன்ன கவியைக்கேட்டுத் தமிழறிவாளு டனேசொல்லி மிகவும் துக்கித்துக்கொண்டாள். அவள் துக்கத்தைமாற்றி இவள் வந்தகாரணமேதோவென்று விசாரமிட்டு கற்றுச்சொல்லிப் பெண்களால் மொண்ணச்சிகளையழைத்து அந்தவிறகு தலையனைப் பதினாறு வது கட்டுக்கு எழைத்துக் கொண்டுபோய் தொப்பரத்திலே சமைத் திருந்தால் சாப்பா டிடுங்களென்று சொல்ல அப்படியே அழைத்து ஒரு கல்லாவியை தைத்துப்போட்டு வெந்ததும் வேகாததும் கல்லும் நெல்லுமாய் சாப்பாடு கொண்டுவந்து வைத்தார்க ளந்தச் சாப்பாட்டைப் பார்த்து இவர்கள் வீட்டிலே சாப்பிடாதவரானபடியினாலும் சாப்பாடிருக்கின்ற திட்டமும் பார்த்து சாப்பிடுகிற பாவனையாய்ச் சாதத்தின்மேல் கையை வைத்துக் கொண்டு விறகு தலையனாகிய நற்கீரர் சொன்ன

கலித்துறை

நெல்லான்மருதமணலுண்மையானெய்தநீண்டகன்ற
கல்லாற்குறிஞ்சிமகரின் வெம்பாலைகலையின்முல்லை [ள்
வில்லாய்புருவத்துவேனெடுங் கண்ணின்மெல்லிநல்லா
சொல்லால்நிலமட்டுங்காட்டுவனியிட்ட சோரிடத்தே.

என்றுசொல்லியதற்குப் பொருள்சொன்ன,

வெண்பா

கல்லொன்றுநெல்லிரண்டு காணுமணன்மூன்றரிசி
கல்லையுடனஞ்சுவகை காட்டிலேன்—வின்னுதலாம்
வல்லபடிசெய்த வகையெல்லாமுங்களது
முல்லைநகையாட்கு மொழி.

ஒன்றிரண்டுதவியுஞ் சொல்லிக்காட்டி ஆசனத்தையுந் தள்ளிப்போட்டு அப்பாலே போயிருந்தார். அதை கேட்டு கற்றுச் சொல்லிகள் போய்த் தமிழறிவாளுக்குச்சொன்னார்கள். தமிழறிவாளும் நல்லதென் றந்த விறகுதலையனைக் கச்சேரி மண்டபத்துக்கு வரச்சொல்லியழையுந்த ளென்ன வப்படியே கற்றுச்சொல்லிகள் எக்களத்திகள் வந்து விறகுதலையனைக் கச்சேரி மண்டபத்துக்கு வாருமென் றழைத்தார்கள் நல்லதென்று விறகு

தலையனுன நற்கீரதேவர் கச்சேரி மண்டபத்துக்கு வருகிறபோது பதினேழாங் கட்டுக்குள்ளே சூஸ்திரப் பதுமைகள் இவரை ஆகடியம் பண்ணும்பொருட்டு எதிரே வந்ததுகண்டு தெண்டாலே யடித்தார் அந்தசூஸ்திரப் பதுமைகளெல்லாம் கலைந்து விழுந்து போச்சுது அதுகண்டு அப்பாலே பதினெட்டாம் வாசலிலே போகிறபோது இரண்டுபக்கத்திலும் புலிகள்சீறி வந்தன. அந்தப் புலிகள்மூன்னே செம்பருத்திப் பூவைபோட்டார். அவைகளை மாமிசமென் றெடுத்துக்கொண்டு அப்பால் போயின, அதுகடந்து அப்பால் ப்த்தொன்பதாம் வாசலில் போகிறபோது இரண்டுபக்கங்களிலும் கரடிகள் சீறிவந்தன அப்போது காந்தக்கல்லைக் கற்றூணில் தட்டினுர். அதிலே நெருப்புப்பிறந்தது அதுகண்டுபயந்துஅப்புறமோடிப்போயின அதுகடந்தப்பாலே இருபதாம்வாசலில் போகிறபோது இரண்டுபக்கமும் யானைகள்கெர்ச்சித்து தும்பிக்கையை நீட்டிக்கொண் டெதிரே வந்தன அவைகள் கையிலே கருப்பங் கருணையைக் கொடுத்தார். அதை வாங்கிக்கொண்டு அப்பால்போயின அந்த வாசற்கடந்து அப்பாலே இருபத்தோராம் வாசலில் போகிறபோது குரங்கு சீறிவந்தது அதன்முன்னே கட்டெறும்பையும் நண்டையும்விட்டார். அதுகண்டுபயந்து அப்பாலே ஓடிப்போச்சுது அந்தவாசற்கடந்து இருபத்திரண்டாம் வாசலிற் போகிறபோது வேட்டை நாய் சீறிவந்தது அதன்முன்பு மல்லிகைப்பூவை போட்டார் அதுசோறென்று முகந்துகொண் டிருந்தது அதுகடந்து இருபத்துமூன்ரும் வாசலிற்போகும் போது அந்தக்கிணற்றிலேயிறங்கி அப்பாலேபோவோமென்று இரங்கினுல் சூஸ்திரப் பலகையானது மேலே மூடிக்கொள்ளு மென்றறிந்து அந்தக்கிணற்றிலொரு கல்லைப்போட்டார் உடனே சூஸ்திரப் பலகை கிணற்றைமூடிக்கொண்டது அந்தப்பலகையின்மேலேறி அப்புறம்போனுர். அந்தவாசற்கடந்து இருபத்து நான்காம் வாசலிற்போகும்போது அந்தவாசலிலே குங்குமச் சேறுஇருந்தது அப்போது எண்ணெய்ச் சீலையை யெடுத்து காலிலே தடவிக்கொண்டு அந்தச்சீலையையெடுங்கங்கே பட்டிருக்கிற சேறெல்லா மூங்கிற் பிளவாலே நன்ருய் வழித்துப்போட்டு அங்கே வெள்ளித்தட்டில்

வைத்திருக்கிற ஆழாக்கு பனிநீரிலேகாலேக்கழுவிக்கொண்டு மற்றப்பாதி பனிநீரையுந் தமதுபிறகே சூழ்ந்து வருகிறதாதிகள் கையிற்கொடுத்து இந்தப் பனிநீரைக் கொண்டுபோய் உங்கள் நாச்சியார் தலையிலே யூற்றுங்கவென்றுசொல்லி அந்தவாசற்கடந்து இருபத்தைந்தாம்வாசலுக்கு வருகிறபோது அங்கே சித்திரமண்டபத்திற் பாரதராமாயண மற்றுமுண்டான கதாப்பிரசங்கங்களெல்லா மெழுதியிருந்தன அவைகளைப் பார்த்து நாமிங்கே வேடிக்கைப் பார்த்துக்கொண் டிருந்தால் பொழுது விடிந்துபோகுமென்று நினைத்துச் சீக்கிரமாகப்போகச்சே பிறகேவருகிற மொண்ணிச்சிகள் விறகு தலையனைப் பார்த்து இந்தச் சித்திரங்க ளிருக்கின்ற விநோதங்களைப் பாரும் பாருமென்று சொன்னார்கள் அதற்குவிறகுதலையனை நற்கீரர் சொன்னதாவது,

வெண்பா

கலைகாட்டுந்தோகைக் கருஞ்சக்கரத்தின்
வலைகாட்டியாயிரம் பொன்வாங்கி-கலைநெகிழா
சூத்திரமாய்த்தோடுங் குறிபோலிருந்ததிந்த
சித்திரமுஞ்செய்யுஞ் சே

என்றுசொன்ன கவியைக் கற்றுச் சொல்லிகள் போய்த் தமிழறிவாளுக்குச் சொல்லத் தமிழறிவாளும் சந்தோஷப்பட்டுச் சீக்கிரமாக அவனையழைத்துவாருங்களென அப்படியே யழைத்து வருகிறபோது இருபத்தாரும்வாசலிலே நீராழிமண்டப மிருந்ததற்குமிதப்பு போட்டுக்கொண்டு பள்ளமறிந்து கரையேறிப்போனார் அதுகண்டு அப்பாற்போகிறபோது இருபத்தேழாம் வாசலிலே பளிங்குமாமண்டபத்திற்போகையில் அந்தமண்டபத்தின்மேலே செய்துவைத்திருக்கிற சித்திரங்களைப்பார்த்தால் கீழேகால்சறுக்கிவிழுவா னப்படி விழாமல் உபாயமாகக் கடந்துபோய் அப்பால் இருபத்தெட்டாம்வாசலிலே தமிழறிமண்டபமுங்கடந்து இருபத்தொன்பதாம் வாசலிலே இயலறிமண்டபமுங் கடந்து அப்பால் முப்பதாம் வாசலிலே கத்துப் பார்க்கின்றமண்டபத்திற் கோழிச் சேவற்போகும் ஆட்டுக்கடாபாய்ச்சலு மிப்படியாக அநேகவிநோதங்க ளிருந்தன அந்தமண்டபத்திலே கூத்தாடுகிறதும் மத்தள

தாளம் போட்டுக்கொண்டு நாடகசாலைப்பெண்களும் கூத்தாடிகளும் இவருக்கெதிரே புகழ்ச்சி பண்ணிக் கொண்டு ஆடவந்தார்கள்.

இந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தால் பொழுதுவிடிந்துபோகும் ஆனபடியால் வந்த காரிய மாகவேண்டுமென்று அவர்களைப்பார்த்து உங்களாட்ட மும் பாட்டமும் நானே பார்க்கிறவன் உங்கள் நாச்சி யாரே பார்ப்பாளென்றுசொல்லி அவர்களுக்குத் தியா கங்கொடுத்து அதுகடந்தப்பால் கச்சேரி மண்டபத்துக் குப்போகிறபோது தாதிகள்போய்த் தமிழறிவாளுடனே இந்தமுப்பத்தொரு வாசலுங்கடந்து வந்தானென்று சொல்லக்கேட்டு தமிழறிவாளுஞ் சந்தோஷப்பட்டு இத்தனை கட்டுக்காவலனைத்தையுங் கடந்து வந்த போதே இவன்தேவனேயென்று அந்தமண்டபம்விட் டுத் தன்னரண்மனையே போனாள் நற்கீரரும் அந்தக் கச்சேரி மண்டபத்துக்கு வந்தார். அந்த மண்டபத் துக்கு நவரத்தினத்தாலும் பட்டுபட்டாவளி சீனிசீனும் பரத்தினாலு மலங்கரித்து அதிலே மயில்களாடவும் குயில்கள் கூவவும் அன்னங்கள் நடந்துவிளையாடவும் வண்டினம் பாடவும் பஞ்சவர்னக் கிளிகள் கொஞ்சிக் கொஞ்சிப்பேசவும் தென்றல்வீசவும் மேற்கட்டுகட்டில் சூஸ்திரப்பிரதமைகள் மூப்பத்திரண்டுவகை மேளவாத் தியம்பண்ணவும் சாம்பிராணி தூபமும் மல்லிகைமுல்லை சாதி புன்னை மருக்கொழுந்து இப்படிக்கொத்த பரிமள திரவியங்களுங் - கமகமவென்று பரிமளித்துக்கொண் டிருக்க இப்படி நானுவிதமான அலங்காரமாயிருக் கப்பட்ட கச்சேரிமண்டபத்தில் களித்து யானைத்தந் தக்கட்டிலும் நவரத்தின கசிதமாகச்சோடித்து இரண்டு கட்டிலும் சோடாகப் போட்டிருக்கிறது. இந்தப் புது மையெல்லாம் பார்த்து நற்கீரதேவர் அதிசயப்பட்டு இத்தனைக்கு வல்லவளானபடியினாலே இத்தனை ஆடம் பரப்பு வட்டனை அலங்காரவதுமையினாலே தனக் கொருவரு மெதிரில்லையென்று விருது கூறிக்கொண் டிருக்கிறாள் இவளை வெல்லுகிறது. அருமையென்று விசாரப்பட்டு ஆனாலென்ன நம்முடைய குருவாகிய சுப்பிரமணியக்கடவுள் பாதாரவிந்தமே துணையென்று

அந்தக்கட்டிலண்டைக்குவந்துகட்டிலேப்பார்த்து அதிசயப்பட்டு இந்தக் கட்டிலிரண்டையும் பெண் கட்டில் ஆண்கட்டிலென்று பிரித்து விபரம் தமதுகையினாலே ஒருகட்டிலே நெறுக்கியிருத்திப்பார்க்கத் தளர்ந்திருந்தது இதுபெட்டியானைத் தந்தக் கட்டில் பெண் கட்டிலாமென்றறிந்து தமது கால்மாடு தலைமாடு தெரியாமலிருந்தபடியினாலே அதனையறியவேண்டித் தமது கையிலிருந்த எலுமிச்சம்பழத்தையெடுத்து அந்தக் கட்டிலின் நடுமையத்திலே வைத்தார் அது உருண்டுபோய் கால்மாட்டில் நின்றது அதுகண்டு கால்மாட்டிற் சூத்திரப்பிரதமைகளுந் தலைமாட்டிலே நிலைக்கண்ணாடியுமிருக்கிறது இலட்சணமாமென் றறிந்துகொண்டு அந்தக் கட்டிலின்பேரிலேறி வொருகந்தையை விரித்துப்போட்டுப் படுத்துக்கொண்டார் கட்டிலிலே பிரதமைகள் கட்டியிருந்தபடியினாலே மேற்படி சூஸ்திரப்பிரதமைகளெல்லாங் கால்பிடிக்கவும் உடம்பு பிடிக்கவும் மயில் விசிறியெடுத்துவீசவும் கண்ணாடியெடுத்துக் காட்டவும் வெண்சாமரை யெடுத்து வீசவும் இப்படியாகப் பிரதமைகளெல்லாம் பணிவிடை செய்யத்தக்கதாக விறகுதலையனான நற்கீரதேவர் படுத்துக்கொண்டிருக்கிறதைக்கண்டு கற்றுசொல்லிகள் சொன்னார்கள் அவளுநங்கேட்டு விசாரப்பட்டு பின்பு மனந்தெளிந்துகொண்டு இவன் எத்தன்மையனென்கிறதற்குச் சந்தேகமில்லை இப்படிக்கொத்த வித்துவானைச் சேர்ந்தாலும் தோஷமில்லை மோட்சமுண்டதனாலு மிவனுடைய திறமையை இன்னமும் பார்ப்போமென்று தன்னுடைய தோழியான இயலறியும் பெருமாளை வரவழைத்து அவளுக்குத் தன்னுடைய ஆபரணங்களை யெல்லாம் பூட்டிச் சிங்காரித்து வெகு ஆடம்பரத்துடனே யனுப்பினாள் அவளுந் தமிழறிவாள் வடிவாக வந்து நின்றபோது இவளைப்பார்த்து இவள் தமிழறிவாளல்லவென்று தன்மனதிலெண்ணிக்கொண்டு விறகுதலையனான நற்கீரதேவர் சொன்னதாவது,

வெண்பா.

பூத்துநகையுமுகிழ்முலையுமெஞ்ஞானச்
சித்தசிவம்போலத்தாதியரா—மெத்தெனவந்

தன்புருகாநெஞ்சத்தவரிருக்கநீர்வரலென்
பொன்சிலம்புஞ்சிற்றடியாய்போம்.

இப்படியாகச் சொல்லக்கேட் டியலறிவாளும் நீ ரென்னை தூஷணித்தாலும் நல்லது வெகுமானமாய்ப் போவென்றீரே அதுவே போதுமென்று சொல்லிப் போய் தமிழறிவாளுடனே சொன்னுளதுகேட்டு தமி ழறிவாளும் இனிமேல்யாரையனுப்பினுலுமாகிறதில்லை நாமே போகவேண்டுமென்று தாயான மரகதவடிவினை அழைத்துச் சொல்வாள் விறகு தலையனிடத்திற்கு நா மாரை யனுப்பினுலு மவர்களை தூஷணித்து ஓட்டிவிடு கிருனே இனிநான் அவனிடத்திற்குப் போகவேணுமே யென்று கேட்க மரகதவடிவு சொல்வாள் விறகுதலையனு வதேது அவனிடத்திற்குநீ போகிறதேது இதென்னமா யிருக்கிறது நீ இதுவரையுந் தமிழறிவாளென்று பேர் பெற்று உனக்காருமெதிரில்லாமற் கீர்த்திபடைத்திருந் தாய் இப்போது வந்தவனுக்கு ஏற்றசமர்த் தாராய்ந்து சொல்லிக்கொண்டு சிறுபிள்ளைகளை யழைத்தவன் முன் னே கேளிக்கையாடச்சொல்லி வேடிக்கைப் பார்ப்பித்து பொழுதுவிடியப்பண்ணி இளிச்சவாய்ப்பித்தாமோசம் போனுயோவென்று அடித்தோட்டி விடுகிறதே யல்லா மல் அந்த விறகுதலையனைக் கூடவும் விதியோ மகளே போகவேண்டா மென்ருள். அதுகேட்டுத் தமிழறிவா ளுந் தாயான மரகதவடிவுக்குச் சொல்லுவாள். வந்த வன் எங்கேயாகிலும் மோசம்போனுலல்லவோ அடித்து ஓட்டிவிடலாம் நல்ல இலட்சண மறிந்தவனுமாய் மகத் தான வித்துவானமாகக் கட்டுக் கட்டுக்குக் கவிசொல்லிக் கொண்டு வந்தசமர்த்தையு மறியவும் இப்பவும் உம்மி லும் வல்லமையானவனை நம்முடைய வாய் வலிமையி னுலே அடித்து ஓட்டிவிட்டால் பூமியிலும் அபகீர்த்திக் கிடமாகும். இவனும் வசைகவிபாடி போடுவான் இது காரியமல்லவென்று தாயான மரகதவடிவுக்குத் தமிழறி வாள் சொல்லி காண்பித்ததாவது.

வெண்பா

கல்லாவொருவன்ருேள் சேர்தலினுங்கற்றவனுே
டல்லற்படுவ தழகன்ருே—சொல்லாய்

கரும்பிரசங்சகருமோ கல்வியறிகோதாய்
விரும்புவரோ வேம்பின் கனி.

என்றுசொல்லிக் காண்பித்தவுடனே தாயான மாகதவல்லிச் சம்மதித்து நல்லது போவென்று சொன்னாளதன்பிறகு தான்போய்ச் சலக்கமனே புகுந்து பச்சிலை பதமஞ்சனரைத்துச் சலக்கமாடித் தான் பூண்டுக்கொண்டிருந்த ஆபரணங்களெல்லாம் கழற்றிப் போட்டுக் கண்ணுக்கு மையிட்டுக்கொண்டு சந்தனம் பூசிக்கொண்டு நெற்றிக்குத் திருநீறுங் கஸ்தூரிப்பொட்டு மிட்டுக்கொண்டு ஒரு வெள்ளைப்புடவை யுடுத்திக்கொண்டு தாதிகளிடப்பட்ட வுடமைகளிட்டுக் கொண்டு இன்னந் தன்னை யறியாம லிருக்கவேண்டுமென்று மூனனுலே போய்வந்த இசையறியும் பெருமாள்தானே முன்னிலு மலங்காரம் பண்ணிக்கொண்டு திரும்பவும் வந்தானோ இவள்தான தமிழறிவாளென்று அவன் மனதிலெண்ணவேண்டுமென்று நினைத்து வெகு ஆடம்பரமாக மேளதாளங்களுடனே கட்டியக்காரியர் எச்சரிக்கைச் சொல்ல, இசையறியும் பெருமாளை முன்னே நடத்திக்கொண்டு தான் அவளுக்கு அடப்பக்காரியையுப்போல பிறகே நின்று வெற்றிலைமடித்து நீட்டி நீட்டிக் கொடுத்துக்கொண்டு வருகிறவர்களுடைய இலட்சணத்தைப் பார்த்தும் முகமிருக்கிற வொளிவையும் பார்க்கிற பார்வையும் அவளுடைய ரூபாதிசயத்தையும் நடையினுடிப்பையும் பிடியிலடக்கும் இடையையும் மூன்றும் பிறைச் சந்திரனைப்போலே யிருக்கிற அவளுடைய முகப்பருவத்தி னழகையும் பார்த்து இவளே தமிழறிவாளாகவேண்டும். இவள் தன்னுபரணங்களை யெல்லாங் கழட்டிப்போட்டு மாறுபாடாக வருகிறதுங் கபடமா யிருக்கிறதென்று தமிழறிவாளைப் பார்த்து தூஷித்துப்பாட நாவெழாமல் பிறகு தலையனுன நற்கீரர் சொன்ன,

கலித்துறை

கருவிழித்தவிழிக்கணையால் வெய்யகாமனையன்
றுருவழித்தவிழியதுவோ விலங்குவமையில்லாக்
குருபதத்திளங்கொங்கை மின்னுளிடங்கூடவின்று
பருகவிதித்திலனே வெய்ய காமப்பசிதனக்கே.

என்று சொன்ன கவியைக் கேட்டுத் தமிழறிவாளும் இவனம்மைப் பார்த்து அறிந்துக்கொண்டு இத்தனை யுடமையிட்டுப்பாடினனென்று சந்தோஷப்பட்டு அதிசீக்கிரமாய் பெட்டையானைத் தந்தக்கட்டிலென்ற பெண் கட்டிலின்பேரில் மூகனையாகவந்து இசையறியும் பெருமாளை யுயரவைத்துத் தான் கீழே யிருந்துக் கொண்டு வெற்றிலை மடித்துக்கொண் டிருந்தாள். அது கண்டு விறகுதலையனன நற்கீரதேவரும் இப்படி கபட மார்க்கமாக வெற்றிலை மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தால் எனக்குத் தெரியாதோ வென்று மனதிலெண்ணிக்கொண்டு வெற்றிலை மடித்துக்கொண் டிருக்கிறவள் கையிலே கொடுக்கப்போனர். அதைத் தமிழறிவாளானவள் கண்டு இவன் நம்மை யறிந்தல்லவோ நம்முடைய கையில் வெற்றிலைப்பாக்குக் கொடுக்க வருகிறுனென்று எண்ணிக்கொண்டு அவர் முகத்தை யேறப் பார்த்துத் தமிழறியும் பெருமாள் சொல்லுவாள். நானொரு கவி சொல்லுகிறேன். அந்தக் கவிக்குப்பயன் சொன்னீராகிலும்முடைய கையிலே வெற்றிலைபாக்கு வாங்குவேன். இல்லாமற்போனல் வாங்குவதில்லை யென்று சொன்னளதற்கு நற்கீரதேவர் சொல்லுவார். நீ சொல்லுகிற கவிக்குப் பயன் சொன்னுலாகுது சொல்லாமற்போனல், உனக்கு ஆறுமாதம் வூழியம் பண்ணுகிறேன். ஒருவேளை நீ தோற்ருல் என்னமாகிறது சொல்லும் பெண்ணே என்ருன். அதற்குத் தமிழறிவாள் சொல்லுகிருள்: ஒருவேளை நான் தோற்றேனே யாகில்தேவரீர் சொன்னபடிக்கு கேட்கிறே னென்ருள். அதுகேட்டு நற்கீரர் ஆனல் நீர் சொல்லுகிற கவியைச்சொல்லும்பெண்ணே யென்ருர். அப்போது தமிழறிவாளு மிரண்டு கட்டிலுக்கு நடுவே பூந்திரை யிடுவித்துத் தமிழறியும் பெருமாளென்கிற வேஷத்துக்குண்டான ஆபரணங்களை எல்லாம் பூட்டிக்கொண்டு பட்டு பட்டாவளி யுடுத்தி அளகத்துக்கு முல்லையணிந்து கைகளுக்கு புனுகு சவ்வாது இட்டு கொங்கைக்கு குங்குமம் கஸ்தூரி யணிந்து மார்புக்குக் கண்டசரம் முத்துமாலை யணிந்து காதுக்குக் கொந்தள மணிந்து கைக்கு அஸ்தகடகமிட்டு காலுக்குச் சிலம்பணிந்து அரைக்கு ஒட்டியாண மணிந்து இசையறியும் பெருமாளை யரண்மனைக் கனுப்பிவிட்டுத்

தான் கட்டிலின் மீதிருந்து கொண் டாலவட்டம்வீச உபயவெண்சாமரை வீச சர்வ பூஷணாலங்கிருதமாகவே இருந்துக்கொண்டு விறகு தலையனை நற்கீரதேவருடனே வாக்குவாதம் பண்ணினதாவது.

வெண்பா

ஐயஞ்சிருபத்தஞ் சேரிறவேரென்பறினும்
வெய்யமதனைந்துகணை மேல்வரினுந்—தையலாள்
கையஞ்சறியாத காளைதோள்சேர்வளோ
மெய்யஞ் சறப்பெற்ற மின்.

என்று சொன்ன கவிக்கு நற்கீரர் தன்னண்டையிலிருந்த அஞ்சறைப்பெட்டியை தட்டிக்காண்பிக்க அதற்குத்தமிழறிவாள் இது யூதிபாஷையைப்போலிருக்கிறது தெரியச்சொல்லவேண்டுமென்ன நற்கீரர் பொருள்விடுத்த விபரம் ஐயஞ்சிறு பத்தஞ்சாவது காடுபடுவதஞ்சு நாடுபடுவதஞ்சுநகர் படுவதஞ்சு மலைபடுவதஞ்சு இவைகளுக்குப்பயன் காடுபடுவதஞ்சாவது அரக்களி செந்தேன் அணிமயிலின் பீலித்திருக்கற்ற நம்பியோடைந்து கடல்படுவதஞ்சாவது செந்நெற்சிறுபயறுஞ் செவ்விளநீர் கன்னற்கதலியோடைந்து நகர்படுவ தஞ்சாவது கண்ணுடிபித்தன் கருங்குரங்கு காட்டானை மண்ணுளுவேந்தனேடைந்து மலைபடுவ தஞ்சாவது மாணிக்கம்பச்சை வைடூரியம் நீலம் ஆணிக்கனகமோ டைந்து துணையஞ்சாவது முல்லையசோகு முழநீலஞ் செண்பகப்பூ அல்லிமுளரியோடைந்து கையஞ்சாவது எண்ணலெழுதலிலை கிள்ளல் பூத்தொடுத்தல் புண்ணமைந்த யாழினேடைந்து மெய்யஞ்சாவது கொட்டாவிநெட்டை குறுகுறுப்பை கூன்குருடு தட்டிவிழுதலோடைந்திப்படியென்று நற்கீரர் பொருள் விடுத்த பின்புபின்னுந் தமிழறிவாள் சொன்னதாவது.

வெண்பா.

பாய்ச்சிமறித்திடுவார் பாதமேநான்குடையார்
வாய்ச்சகனல்புகுந்து வாழ்ந்திருப்பார்—வீச்சிப்
படைவாணர்தங்களுக்குப் பாரின்மேற்காணு
அடைமாவு மல்ல வது.

என்று சொன்னதற்கு நற்கீரர் பொருள் சொன்னது.

வெண்பா

தங்கைபலவைச்சடியிற் கால்களொரு நான்குளதாம்
பைம்பொர்க்களமேறிப் பாய்ச்சுதலா—லெம்பெரிய
மாவல்ல நல்ல மாக்காலேமா நிலமன்
பூவலருங்கோதாய் பொருள்.

என்று பொருள்விடுத்துச் சொன்னபின்பு தமழறிவாள் பின்னையுஞ் சொன்னதாவது,

சந்தவிருத்தம்.

அங்காடிகொள்ளப்போ யானைகண்டேன்
அணி நகரமன்றினிலே சேனைகண்டேன்
கொங்காளுமுத்தரசர் தம்மைக்கண்டேன்
கொடிக்கரும்பெரிமாவுங் கூடக்கண்டேன்
அங்கொருவரெதிர்நின்று வெட்டக்கண்டேன்
அதுகண்டியான்றலையைத் தாழ்த்தலுற்றேன்
இங்கிதனையின்னதென் றியம்புவோர்க்கே
எதிரில்லையிப்புவிக்கு ளென்றவாறே.

இந்தக்கவிக்கு நற்கீரர் பொருள்சொன்னதாவது

சந்தவிருத்தம்

எதிராங்கமன்றினிலே யேறக்கண்டேன்
எழுத்தரியதேமாவு மணிதர்கண்டேன்
அதிராங்கமாயிருவ ராடக்கண்டேன்
அவ்விருவரெதிர்நின்று வெட்டக்கண்டேன்
சதுரங்கமிதுகாணும் வேறொன்றல்ல
தார்குழலேதிதலையைத் தாழ்த்தலேனே
விதிரரங்கமுடையதொரு மானேகேளாய்
வீணருக்கும்வேந்தருக்கும் வேலைதானே.

என்று பொருள்விடுத்தபின்பு பின்னையுந்தமிழறிவாள் சொன்னதாவது,

கவி.

அக்கரமுமெழுதவொண்ணு வாய்மையாளர்
ஆவின்பின்னேதிரிவா ரதுவுமன்றி
சக்கரமும்வலம்புரியுந் தரித்தேநிற்பார்
தாமுரலிற்கட்டுண்டு தயங்காநிற்பார்
மிக்கதொருவடம்புனைவர் வெண்ணெயாடி
வெற்பெடுத்து மற்பொருதுவேலைசூழ்வார்

திக்கெட்டும்புகழ்படைத்த தேவேகேளாய்
திருமாலுமல்லவிது செப்புவீரே.

இதற்கு நற்கிரர் பொருள்சொன்ன கவி

குன்றுதமொழியுடைய வாய்மையாளர்
கோவின்பின்னேதிரிவார் கோபாலரல்ல
ஒன்றுகக்கடல்கடைந்து வெண்ணெயாடி
யுரலோடேகட்டுண்டு வுழவாநிற்பர்
மன்றுடிமலையெடுத்து மல்லுப்போந்து
மற்பொருதிவெற்பெடுத்துக் சொக்கிப்பூண்டார்
சென்றுடுமுறையூரிற் றேனேகேளாய்
திருமாலுமல்லவிது செக்குத்தானே.

என்று பொருள்விடுவித்தபின் பின்னையுந்
தமிழறிவாள் கவி.

படிமுழுதுந்தரித்தங்கே மன்றுள்ளாடிப்
பத்தருமுத்தருமங்கே பரிந்துநாடித்
திடமுடையநான்முகனு மரியுந்தேடித்
தேவரெல்லாம்போற்றரிய திங்கள்சூடி
வாரணியுமுலைமார்பு வராங்கம்போலே
வடிவுடையதிருமேனி தழும்புபட்டும்
படிமுழுதுமாளுவிக்கும் வல்லர்தாமே
பரமனூர்தானுமல்ல பகருவீரே.

இதற்கு நற்கிரர் பொருள்சொன்னதாவது கவி.

வடிவுடையாற்பிறையணிவார் வணிகரெல்லாம்
வழிபடுவார்நாடோறு மனிதர்காண
அடிபடுவார்திருமேனி தழும்புமேற்பார்
அம்மையார்தகவரது காலமன்றிக்
குடியினுடன்மன்னர்தங்கண் முன்னேநிற்பர்
கூற்றனெனவருபவரை மாற்றுவிப்பார்
படிமுழுதுமாளுவிக்க வல்லர்தாமே
பரமனூர்தானுமல்ல பணத்தினூரே.

என்றுசொல்லி பின்னும் தமிழறிவாள்சொன்ன கவி.

கட்டியவன்கரையாற காலபலமேயுடையார்
இட்டதோர்மடுதனிலே யெய்தியதாமரையும்
கொட்டியுநெய்தலுமே கூடமுளைத்திடுமே
யிட்டதமிழ்க்கரசே யேரியுமல்ல.

இதற்கு நற்கீரர் பொருள்சொன்னதாவது. கவி
கால்வழியேநாலோடிக் கரைகள்சேர்த்துக்
கற்பராய்ப்பல்லிட்டுப் பஞ்சுவைத்துப்
பரவுதல்போல்நூல்தொடுத்து இழைதிருத்திப்
பசுமையாயுடைவிட்டுப் பிணையல்செய்து
பூவலரும்நெய்துலகிற் கொட்டிவிட்டுப்
பொருந்தியதாமரையும் பூத்தேநிற்பர்
வேல்பொருதுங்கண்ணளே யேரியல்ல
மேகலையென்றேயிதனை விளம்புவாரே.

என்றுசொல்ல தமிழறிவாள் சொன்ன கவி.
கானகத்திருந்துபோந்து கைகளாற்குத்துமுண்டு
தானகக்கூடந்தன்னிற் றண்பனிநீருமாடி
மேனிலத்தவளங்கொண்டு வீதியில்வருவாரங்கே
ஆனையுமல்லகண்டீ ரறிந்திடீரரசர்கோவே.

என்றுசொல்ல நற்கீரர் பொருள்சொன்ன கவி.
தானும்பொற்கூடந்தன்னி றன்மையிற்குத்துமுண்டு
தேனுடன்பாலுநெய்யுந் தெவிட்ட நல்லமுதுசெய்யு
மாதுவேல்விழியினளே மாநிலத்தோர்கட்கெல்லாம்
ஆனையுமல்லகண்டீ ருருங்கலைதானேயென்றார்.

என்றுசொல்லப் பின்னும் தமிழறிவாள் சொன்ன
வெண்பா

அக்கடாபோகக்கண் டாறிரண்டிலொன்றையுண்
டிக்கடாவிடா யிருப்பாரை-யொக்கிடா
ஒன்னார்புரத்தை முனிந்தாரேயந்நாளில்
மூன்னான்கிலொன்றுடையான் முன்.

என்றுசொல்ல விதற்குப் பாண்டியன் முன்னே நரியைப் பரியாக்கினதென்று நற்கீரர் பொருள் விடுத்தார் பின்பு தமிழறிவாள் மறுபடியுஞ் சொன்ன,

கவி.

நீரிலானது தானவைமூன்றுள
நெடியகானில் விளக்கொருமூன்றுள
ஊரிலாடவும் பாடவுங்கொட்டவு
மொன்றிலொன்று பேசையராமெனச்
சேரவாங்கு தன்னுடன்கூடவே
தெற்குமாமுனி தன்னையுமகவே

பாரின்மீது இயல்வல்லார்க்கிது
பன்னிரண்டு வருஷம்பகருமே.

அதற்கு நற்கீரர் பொருள்சொல்லுவார் நீரில் மூன்ருவது மகரம்-மீனம்-கர்க்கடகம் - கானில் மூன்ருவது மேஷம்-ரிஷபம்-சிங்கம்-ஊரில் மூன்ருவது ஆருவது துலாம், பாடுவது-மிதுனம், கொட்டுவது-தேள், பேதையாவது-கன்னி, தனுசாவது-வில், தெற்கு முனியாவது கும்பமென சொல்லி பின்னுந் தமிழறிவாள் சொன்ன,

கவி.

வருவார்கூடுபுகுவார் வாய்கூப்பிநிற்பார்
பருவாரெல்லாந்தானே பரிந்திருப்பார்—நீரிற்
சுழுத்தேறுபாலித் துறைநாடாசொல்லாய்
எழுத்தாணியல்ல விது.

இதற்கு நற்கீரர்பொருள்சொன்ன வெண்பா.

வருவார்கூடுபுகுவார் வாய்கூப்பிவந்து
பருவாரெல்லாந்தானே பரித்துழல்வர்-சீரெல்லாங்
கச்சிருக்குங்கொங்கைக் கருங்குழையியீர்கார்வண்
ணித்திரையினிற்காணி லுப்பு.

பின்னுந் தமிழறிவாள் சொன்ன வெண்பா.

துய்யஞ்சுபாணந் தொடுத்தான் வேளிப்பொழுதே
வெய்யஞ்சுவிட்டாலு மியான்வேண்டேன்-மெய்யாக
கையஞ்சுடையான் கதிர்முகத்திலொன்றுடையான்
மெய்யஞ்சுடையான் விளம்பு.

இதற்கு நற்கீரர் பொருள்சொன்ன வெண்பா.

நினைக்குமரவிந்த நீள்பசலேசூதம்
அனைத்துணர்வுமாற்று மசோகந்-தனித்திருந்து
முல்லேகிடைகாட்டு மானேமுழுநீலங்
கொல்லுமதனம்பின் குணம்.

என்றுசொன்னது கையஞ்சுடையானுவது தேரின் வண்மை இறை இம்மை நெருப்புக்குறி நுண்மையோடைந்து கதிர்முகத்தி லொன்ருவது சூரியனைப்போல் ஒளியுடை நெட்டையுடல் முறித்தல் வெம்பிகற்ருமையோடைந்து என்றுசொல்லித் தமிழறிவாளைப் பார்த்து நற்கீரர் சொல்லுவார் நீசொன்ன கவிகளுக்கெல்லாம் நான் பயன்சொன்னேனே இனிநாஞெரு கவிசொல்லு

கிறேன் அதற்கு நீபொருள் சொல்லென்று தமிழறி வாளுக்கு நற்கீரர் சொன்னதாவது.

வெண்பா

பஞ்சவர்கள்பேரும் வடிவுமவர்குணமும்
தஞ்சமுடனேயதனைச் சாற்றவே-நெஞ்செதிரே
யின்னவகையி னடைவேந்தனையுஞ்
சொன்னார்புலவர் தொகுத்து.

இதற்குத் தமிழறிவாள் பொருள்சொன்ன விபரம் பஞ்சவர்கள் பேரானது பிருதிவி - அப்பு-தேயு-வாயு-ஆகாசம் வடிவாவது மெய்-வாய்-கண் - மூக்கு - செவி குணமாவது - சத்தம்-பரிசம்-ரூபம் - சரம்-கந்தம் உணர்வாவது காண்டல் கேட்டல் உண்ணலுடுத்த லுயிர்த்த லென்றுசொன்னாள் பின்னையும் நற்சீரர்சொன்ன,

கவி.

படிதனையிருகப்பற்றிப் பருநிலமதிரக்குத்தி
யுடல்தனையன்றுபாயக் கியங்கையும்புக்கிநின்று
கொடிபலசூழ்தலாலுங் குழுறியேவளைத்தலாலும்
வடிவுடைமாதேகேளாய் மதகரியல்லகண்டீர்.

என்றுசொல்லத் தமிழறிவாள் பொருள்சொன்ன

வெண்பா

காற்றில்விளைவாகுந் தரணியின்மீதினிலே
மாற்றவரைவெல்ல வகையுளதே-சேற்றுடும்
ஆற்றுமையாலிந்த வம்மடுவிற்றூன்கவிழ்க்கும்
ஊற்றுலே கண்ணீ ரிருந்து.

என்றுசொல்லி தமிழறிவாள் விறகுதலையனான நற்கீரரைப்பார்த்து சொன்னதாவது,

வெண்பா

மன்னுகலைக்குரிய வல்லீரேயாமாகிற்
பண்ணும்விறகுதலைப் பாவலே-யின்னமுநீ
சொல்லுதியோ வென்றுரைபப சொல்லுவேன் சொல்லுமென்றால்
வல்லமையான் செந்தமிழின் மான்.

என்றுசொல்லினவுடனே நற்கீரர் சொன்னதாவது,

கவி.

ஞாலமிகுத்திருக்கு நல்லகரியமேனி
நானிலத்திலறியாத தேசமில்லை

காலுமுண்டுகாசினியில் நடக்கமாட்டார்
கருதரியசிறகுமில்லை பறந்தேபோவார்
சிலமுடன்மைந்தரையும் பெறுவார்கண்டீர்
சிநேகிதர்வந்தடுப்பார்கள் சேரவொட்டார்
ஆலமுண்டகண்டத்தா ரருளினாலே
ஆராய்ந்தேயிப்பொருளை யறிந்திடாயே.

என்றுசொல்லத் தமிழறிவாள் சொன்ன கவி.

தேங்குபாலிலுப்பைபன்னை வடவாலத்தி
செய்யமாதளைகொய்யா தின்றேசாலத்
தாங்கிளரிக்கோபுரங்கள் சாலைசோலை
சாளாங்குதிருக்கோயிற் றுலங்குவிக்கும்
ஆங்கிவணிபணியாக வினங்களோடும்
அணிதோப்புக்காவனங்க ளடுத்துவாழும்
மாங்கனிக்குத்தூத்தித்தலை கீழாய்நிற்கும்
வவ்வாலென்றிதன்பேரை வகுக்கலாமே.

என்றுசொல்ல பின்னும் நற்கீரர்சொன்ன கவி.

படைதனிற்சென்றவையருளத் தொலைத்துநேரா
பாவலரையறுத்தவென்று படையேகூடும்
குடமுடையபெரிதான குதிரையேறும்
கோட்டைகொள்ளுங் கொக்கரிக்குங்கொள்ளையாடும்
அடலுருவவேலெரிந்த பகையைத்தீர்க்கும்
ஆராளிபுவியாளும் மாற்றானல்ல
விடைமிழத்தசிவனருளாற் றெரிந்துநன்றாய்
விமரிசையாயிக்கவியை விளம்புவாயே.

என்றுசொல்ல தமிழறிவாள் பெருமாள் சொன்ன கவி.

செந்திருக்கபூச்சூடிக் கனலுமேந்தித்
திருக்கரத்தில்மானுமொரு மழுவுமேந்தி
விந்தைதனையிடப்பாகந் தனிலேவைத்த
விமலரதுதிருமகனார் விபரத்தோடு 68074
கந்தருக்குமுன்பிறந்த தங்கைமைந்தன்
கரிகரியாம்விகடவிட தடக்கமலபாதன்
தந்திமுகனேறுபெருச் சாளியென்றே
தாரணியிலவர்க்குலங்கள் சாற்றலாமே.

என்று தமிழறிவாள்சொல்ல நற்கீரர்சொன்னகவி.

வீரமுடனுடனைத்து மூடையார்சால
விடையிலுகந்தேருவார் சிவனாரல்ல

பாருலகில்புல்லருக்கு முதவியாவர்
பண்பானபூமுடிப்பார் பாவையல்லர்
தாரணியிலவரவர்தந் தொழில்செய்விப்பார்
சகலகலை நிறமுடையோர் பறையோரல்லர்
சீருலகிலிவர்யாரோ தெரிந்துக்கொண்டு
சேயிழையேயிப்பொருளைச் செப்பிடாயே.

என்றுசொல்லத் தமிழறிவாள் பொருள் சொன்னகவி.

கருதலர்கள்படை நடுங்க வசுரர்மாளக்
கடகமுடை படை துரகக் கரிதேர்மாளப்
பரிதியொளிவாமினிய கம்பத்தானும்
பாவலருமெம்மையுமா சுரர்பலரும்வீழ
மருமலரைச்சிரமறுத்த திகிரிவேந்தன்
மால்தமக்குமருகனென்னும் வள்ளிபங்கன்
செருவில்வருமசுரர்குல காலனெங்கள்
செந்திவடிவேலரது சேவலாமே.

என்று தமிழறிவாள்சொல்ல பின்பு நற்கீரர்
சொன்ன கவி.

தும்பியுண்ணப்பூமலருங் காயுமுண்டு
சோறுமுண்ணார்பசியாது வயிறுமுண்டு
வெம்பியதோர்பழம்பழுக்கு மெடுப்பார்தின்னார்
விடுமுண்டுசம்பதனல் மேய்ந்தநல்ல
நம்பியதோரவரவரே நம்பமாட்டார்
நல்லநல்லமுறைநிற முடையார் நளினகாமன்
அம்புசெறுகும்பழுலே மாதேகேளாய்
யாராய்ந்தேயிப்பயனை யறிந்திடாயே.

என்று சொல்ல தமிழறிவாள் பொருள் சொன்ன கவி.

பன்னுமொருமச்சகந்தி முனியேகூறப்
பரிமளகந்தியுந்தாங்கிப் பகைமையோட்ட
தன்னியங்கண்டம்முனியும் தழுவிச்சாரச்
சந்தனுராஜனுதித்த தகைமையாலே
அன்னவர்கள்குலத்தில்வருங் குந்திதேவி
அருள்புதல்வர்காந்தாரி யளித்தசேயன்
சொன்ன துரியோதனனு மைவர்கூடச்
சூதாடித்தோற்றதுவுஞ் சொக்கட்டானே.

என்று தமிழறிவாள் சொல்ல பின்பு நற்கீரர்
சொன்ன கவி.

சிற்ருடையுடுத்திருக்குஞ் சிறுமியல்ல
சிறந்தபூணூலணிந்திருக்கு மறையோனல்ல
ஒண்கழுத்தில்மணியுடையார் ரிஷபமல்ல
உத்தமியேபலர்தொழுவார் சுவாமியல்ல
சித்தாரப்புரமெரித்தார் முன்னே நிற்பார்
சிறந்தபணிவிதைக்குதவாத் தீயரல்லா
பொற்பாதம்பூண்டிருக்குந் திருமாலல்ல
பூவையேயிக்கதையைப் புகலுவாயே.

என்று சொல்ல தமிழறிவாள் பொருள் சொன்ன கவி.

மந்தாரம்பிச்சை முல்லையறுகுரங்கை
மதியுடனேகொன்றை தும்பை மலருஞ்சூடி
எந்தாயம்பிகையாளை யிடத்திலேந்தும்
ஈசரதுதிருக்கோயின் முன்னே நிற்கும்
கொந்தாருமலராடை யணிந்துக்கொண்டு
குவலயமென் றிருவிழாக் கொள்ளுங்கண்டீர்
ஐந்தானகாரியமும் மறிந்தகோவே
அரியகொடிக்கம்பமென்றே யறையலாமே.

என்று தமிழறிவாள்சொல்ல விறகுதலையனுன நற்கீரர் இந்த பிரசங்கத்திலே பொழுதுவிடிந்துபோகுமென்றெண்ணிக்கொண்டு அந்தத் தமிழறிவாளைப் பார்த்துச் சொன்னதாவது.

வெண்பா.

ஆய்ந்தசயனத்தி லாயிழையேயன்றியே
போந்தவணிகிடக்கப் போகுமா—வாய்ந்த
முன்னுன்குழலையு மூழுமதியுமன்றியே
யென்னுன்கு மென்னசெய்வேன்யான்.

என்று விறகுதலையனுன நற்கீரர்சொல்லக்கேட்டுத் தமிழறிவாளுக்கு மன்மத விகாரம் உண்டாகி திரையை வாங்கிப் போட்டு விறகு தலையனைப் பார்த்தாள் பார்த்தபோது அந்த விறகுதலையனுன நற்கீரர் பின்னுந் தமிழறிவாளைப் பார்த்து சொன்னதாவது,

வெண்பா

பொன்னி னழகும் புவிப்பொறையு மேவாய்ந்து
மின்னிடையும் பெற்றதொரு மெல்லி நல்லாய்-மன்னவ

தோராவழகுடையாள் றேளின்மேலேயணைந்து [ர்கள்
சேராத வாறுதனைச் செப்பு.

என்று சொல்லக்கேட்டுத் தமிழறியும் பெருமாள் அதிகசந்தோஷமாய் மன்மதவிகாரம் பொறுக்கப்போகாமல் எழுந்திருந்துவந்து தன்னைக்கூடச்சொல்லி விறகுதலையனான நற்கீரதேவரைக் கட்டிக்கொண்டு சொன்னதாவது, வெண்பா

கையிருக்கக் காம நெறியிருக்கக் காதலுடன்
மெய்யிருக்கக் கண்டேன் விழிபெருக-மொய்குழலாள்
பாகுஞ் சுவையும் பசுந்தேனு முப்பழம்போ
லாகுமுறக் கூடென்று ளாங்கு.

இப்படி சொல்லிக் கட்டிக்கொண்டவுடனே நற்கீரதேவரும் விசாரப்பட்டு நாமிவளைக்கூடினால் சங்கப் பலகையும்பொறாது நான்குயுகமா யிருக்கப்பட்ட நாமிப்போதிந்தகாரியம் பண்ணினேமேயாகில சங்கத்தாரும் நகைப்பார்கள் ஆகாயவாணி பூமிதேவியும் நகைப்பார்கள் உலகத்திலே அபகீர்த்தியுண்டாகும் இவைகளுமன்றி விறகுதலையனுக்கல்லவோ கட்டிவைக்கிறேனென்று பிரதிக்கினைபண்ணிக்கொண்டுவந்து அப்படியிருக்க நாமிவளைக் கூடுகிறது நீதியல்லவென்று ஓடினமனதைத் திருப்பித் தமிழறிவாள் தம்மைக்கட்டிக்கொண்ட கையைக் கவியினால் விடுவிக்கவேண்டுமென்று எண்ணிச்சொல்லுவார்.

வெண்பா

ஒருவனொருத்தியா யூரில்லாவூர்புக்
கிருவர்க்கிருவரையும் பெற்றாள்-இருவரிலே
மூத்தானைக் கொன்றான் பகைவன் தாதீயிட்டான்
றாதைவருகளவுந்தான்.

என்று சொன்னமாத்திரத்திலே தமிழறிவாள் கட்டிக்கொண்டிருந்த கையைவிட்டு கட்டிலைவிட்டிறங்கி அப்பாலேபோய்ச் சுற்றிலும் பனிநீரிறைத்து மயில்விசிறியை யெடுத்துக்கொண்டு அந்த விசிறிக்குப் பனிநீரைத்தெளித்து நற்கீரருக்கெதிரே நின்று விசிறிக்கொண்டு அவர்சொன்ன கவிக்குப் பொருள்சொன்ன விபரம் ஒருவனொருத்தியாவது சூரியனுக்கு ரதசாரதியா

கிய அருணனென்பவன் ஒருநாள் சூரியனைப்பார்த்து நான் தேவலோகம் பார்த்து வருகிறேனென்று சூரியனிடத்திலே விடைபெற்றுக்கொண்டு முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணுயிர ரிஷிகள் புடைசூழ மேனகை ரம்பை ஊர்வசியென்று சொல்லப்பட்ட தேவகன்னிகைகள் நடனஞ்செய்யக் கொலுவாயிருக்கிற தேவேந்திரன் சபைக்கு ஒருபெண்வடிவாய் வேஷங்கொண்டு அருணன்போனான் அப்போது இந்தப் பெண்ணைக்கண்டு தேவேந்திரன் மோகித்து கூடினான் அந்நேரமே ஒருபிள்ளைபிறந்தது அந்தப்பிள்ளையையெடுத்துக்கொண்டு திரும்பவும் அருணன் சூரியனிடத்திற்குவந்தான் சூரியன் அவனைப்பார்த்து இந்தப் பிள்ளையுனக்கேதென்றான். நான்ஸ்திரீவேஷங்கொண்டு தெய்வலோகத்திலே தேவேந்திரன் சபைக்குப் போயிருந்தேன் அங்கே தேவேந்திரன் என்னைக்கண்டு மோகித்துக்கூடினான் அப்போது பிறந்தது இந்தப்பிளளையென்று சொன்னான். அந்தவிசேஷங் கேட்டு சூரியன் அருணனைப்பார்த்து அந்தரூபத்தை நான் பார்க்கவேண்டுமென்றான். நல்லதென்று சொல்லி முன்னெடுத்திருந்த ஸ்திரீரூபத்தையெடுத்தான். அதுகண்டு சூரியன் மோகித்துக்கூடினான் அப்போது ஒருபிள்ளைபிறந்தது அந்த இரண்டுபிள்ளைகளிலே, மூத்தபிள்ளை வாலி, இளையபிள்ளை சுக்ரீபன் இந்த வாலியைக் கொன்றவர் ஸ்ரீராமர் இராமருக்குப் பகையாளி இராவணன் நகராகிய இலங்கைப்பட்டணத்தைத் தீயிட்டவன் அனுமாரந்த அனுமாருக்குத் தகப்பன் வாயு அந்தவாய்வாகிறதென்று அந்த காற்றுவருந்தனிலு நில்லென்றுசொன்னீரென்று தமிழறிவாள் சொல்லிக்கொண்டு இருக்கிற வேளையில் ஒரு கெவுளிசொல்லிற்று. அதை நற்கீரர் ஆண்டுபார்த்து நன்றாயிருக்கிறது, நாம் வந்தகாரியம் ஜயமாகுமென்றெண்ணிக்கொண் டிருக்கிறபோது தமிழறிவாளும் அந்த கெவுளியையாண்டு பார்க்குமளவில் அது தனக்குமரணஞ் சொல்லுவதென்று அறிந்துகொண்டு நற்கீரரைப் பார்த்தந்த கெவுளி என்னசொல்லுகிறதென்று கேட்டாள். அதற்கு நற்கீரர் இனியொரு க்ஷணநேரத்திலே சாவுசொல்லுகிறதென்று சொன்னார். அதுகேட்டு தமிழறிவாளு மப்படி பிராப்தியிருந்தால்

தப்புகிறதில்லை உமக்கந்த கெவுளி என்னசொன்னால்தா னென்ன நீசொல்லுகிற கதையை சொல்லுமென்றாள். அதுகேட்டு நற்கீரர் சொல்லுவார்: நல்லது நானொரு கவி சொல்லுகிறேன் அந்தகவிக்குப் பொருள்சொல்ல வல்லவியோ என்றார். அதற்குதமிழறிவாளும் நீரத்தனை வல்லவரோ வென்றாள் ஆனாலென்ன நான் தோற் பேனேயாகில் என்குடுமியும் பூணூலுமறுத்துப்போட்டு வீட்டிலே வெள்ளாட்டிப் பையலாயிருந்துகொண்டு உனக்கே பணிவிடை செய்கிறேன். நீதோற்றால் அதற் கென்னசொல்லுகிறாயென்று கேட்க, நான் தோற்றதே யுண்டானால் எனதரண்மனையுமிடிப்பித்துத் தமிழறிவா ளென்கிற பெயரையு மாற்றிப்போட்டு என் தலையையுஞ் சிறைப்பித்து கழுதையின்மேலேற்றி ஊர்வலங்காட்டி யோட்டிவிடுமென்றாள். அதற்கு நற்கீரர் சொன்னது நீ தோற்றதேயுண்டானால் எனக் கிஷ்டமானவனெவனோ எந்த நீச்சனுக்காகிலும் உன்னை கட்டிவைப்பேனென் றார் நல்லது அப்படியேயாகட்டுமென்றாள். அப்போது நற்கீரதேவர் இலக்கணகாவியங்களினாலே வெல்ல அடி யிற்கண்டதை ஒரு வெண்பாவாக பிணைத்துக்கொண்டு கண்டசுத்தியாக சொன்னதாவது,

நச்சுத்தேரேறி நடுக்காட்டில்வேடுவச்சி
பச்சைக்கொடியாட நின்றாளே—இச்சித்தே
மேல்வனங்கவர்ந்து மின்கொண்டுபோகின்ற
மூலபலங்கண்டாய் மொழி.

என்று சொன்ன மாத்திரத்திலே இந்தக்கவியைக் கேட்டு தமிழறிவாளுந் தான்கற்ற பஞ்சலட்சணத்திலு மற்றுமுண்டான நூல்வழியெல்லா மாராய்ந்துபார்த்து ஒன்றுந் தெரியாத படியினாலே விசாரப்பட்டு இத்தனை காலந் தமிழறியும் பெருமாளென்று பேர்பெற்று யாரு மெதிரில்லாமல்கீர்த்தியடைந்திருந்தோம் இந்தவெண் பாவுக்குப் பொருள்தெரியாமற் போச்சுதென்றால் தமி ழறியும்பெருமாள் தோற்றாளென்று உலகத்திலே இகழ் ச்சியாகச் சொல்லிக் கொள்ளுவார்களே யென்று வெகு கிலேசத்துடனே நற்கீரரைப்பாாத்துத் தனக்கு ஒன் றுந் தெரியாதபடியினாலே மொத்தார்த்தமாகச் சொன் னதாவது,

வெண்பா.

உண்டிகொடுத்தார்க்குயிர்கொடுத்தாரென்னாது
வண்டார்குழலாள்மகிழ்வன்றி-உண்டி
உண்டாருஞ்செத்தாருமுண்டிருந்தாருண்டோர்
உண்டானரகப்புகார்.

என்று சொல்லிக் காண்பித்து நிலைக்கண்ணாடியை யுடைத்து அந்த ஓட்டினால் தனதுவயிற்றை பீறிக்கொண்டு சீவனைவிட்டாள் பொழுதுவிடிந்தது நற்கீரதேவருந் தமிழரிவாளை மூடிவைத்து அவள்போகிற கள்ள வழியை கண்டுபிடித்து அந்த வழியாகப் புறப்பட்டுப் போய் விறகு தலையனிடத்திற்குவந்து தம்முடையவேஷத்தை நீக்கிப் பச்சைவளம் வேஷ்டிகளைப் பாகைகட்டிக்கொண்டு கடுக்கன் மோதிரமிட்டுக்கொண்டு விறகு தலையனை எப்போதும்போல விறகுதலையனுக் குண்டான வேஷம்போட்டு அங்கே யிருக்கச்சொல்லி நற்கீரர் பாதக்குற டிட்டுக்கொண்டு நடந்துபோய் சோழராசனைக்கண்டு அட்சதைகொடுத்து ஆசீர்வாதம் பண்ணி அந்தசோழராசன் இருக்கச்சொன்ன இடத்திலேயிருந்தார் இப்பால் மரகதவடிவியென்பவள் இராத்திரி மகள் விறகுதலையன் பக்கலுக்கு போனவளின்னமெழுந்திருந்து வரவில்லையென்று தன்தோழிமாருந் தானுமாக அந்தப் படுக்கறை வீட்டுக்குப்போய் பார்க்கிற போது மரித்துக்கிடக்கிறதுகண்டு அடித்து அலறிவிழுந்து எழுந்திருந்து இப்படிக்கொத்தமகளை எந்தப்பிறப்பிலே காணப் போகிறேனென்று வெகுதுக்கத்துடன் தன்மகளைப்பார்த்துச் சென்னதாவது,

வெண்பா.

நற்கீரர்சொற்கவிக்கு நாடவிடமன்றியிலே
பொற்கொடியாட் சூத்திரங்கள் போதாமற்-சிற்றிடையாள்
கண்ணாடியாலுயிரைப் போக்கினாள்காரிகையும்
பண்ணாள்தமிழறிவாள் பார்.

என்றுசொல்லி மரகதவடிவியுந் தோழிமாருங் கற்றுச்சொல்லிப்பெண்கள் மற்றுமுண்டானபேரனைவரும் புறப்பட்டுக் கூச்சலிட்டுக்கொண்டுபோய்ச் சோழராசாவின் முன்னேவந்து முறையிட்டார்கள் அப்போது

சோழராசனும் வெகுவாய் வியாகூலப்பட்டு மரகத வடிவி அழைத்துவந்தவனர் போனவனர் நடந்தவிபர மெப்படியென்று கேட்க மரகதவடிவி சொல்லுவாள் சுவாமி ஆரோதெரியாது வெட்டியான்போலேயிருக்கு தவன் ஒரு கட்டு வாழைத்தண்டைத் தனதுதலைமேலே வைத்துக்கொண்டு விறகுவிலைகூறி கவிசொல்லிக்கொண்டுவந்தான். அவன் இராத்திரியெல்லாம் மகளுடனே பிரதிவாதித்துக்கொண்டிருந்தான் நாங்களும் சிறிது நேரம் விழித்துக்கொண்டிருந்தோம் பிற்பாடு அவரவர் அங்கங்கே படுத்துக்கொண்டு நித்திரைபோனேம் பிற்பாடு என்ன நடந்ததோ ஏது நடந்ததோ அவன் சொன்ன கவிக்குப் பொருள் தெரியாமற்ருன் போச்சுதோ ஏதொன்றுங் காணக்கூடாது மாண்டுபோனுளென்று சொன்னள் அதுகேட்டு சோழராசன் மிகவும் விசனப்பட்டுச்சொல்லுவான் முன்னே தங்களுடைய வங்கிஷத்திலே ஒரு புருவுக்காகத் தன்னுயிரை யீய்ந்ததும் ஒரு மாயக்கன்றுக்காகக் குமாரனை வண்டியிலறைந்ததுமாக இப்படியிருக்கப்பட்ட சோழராசன் வமிசத்திலே இப்படிக்கொத்த வழிவந்தால் நானேது செய்வேனென்று மிகவுஞ் சிந்தையில் வியாகூலமாய் அந்த சபையைப் பார்த்துச் சோழராசன் சொன்னதாவது.

வெண்பா

மூற்பழிக்கொன்ருயிரையன்றுமுறைவருவா
கற்பத்தேருர்ந்தபழிக்காகாதே—சொற்பெருமைப்
பழிக்குங்கூந்தல்வனமுலையாள் தன்னுடைப்
பழிக்குமென்செய்வேன்யான்.

என்று சோழராசன் சொல்லப் பின்னையும் விசாரிக்குமளவில் அந்தச்சபையிலிருக்கிற நற்கீரரைக்கண்டு அவர் வசனிக்கப்பட்ட வசனத்தை பூராயமாய்க்கேட்டு நிதானித்து இராத்திரிவந்து பிரசங்கம் பண்ணினவன் இவரே யென்றறிந்துகொண்டு சோழராசனைப்பார்த்து மரகதவடிவி சொன்னதாவது.

வெண்பா.

கையாற்கொடையான் கதலிவிறகுவிற்பான்
பொய்யானுமெய்ந்நூற்பொருள்காண்பான்—மெய்யாக

மையாரும்வேற்கண் மடமானை மன்னவனே
யையகோவென்றாரவர்.

என்று சொல்லக்கேட்டு நற்கீரதேவர் சோழராசனைப்பார்த்துச் சொன்னதாவது.

வெண்பா.

பொய்யாதமுத்தமிழின் பொற்கொடிக்குச்சூழ்ந்தகொலை
கொய்யாமதுமாலைக்கொற்றவனே—மெய்யாக
மையாரும்வேற்கண் மடமானைமன்னவனே
கையாரக்கொல்லினேன்காண்.

என்று சொல்லக்கேட்டுச் சோழராசனும் நற்கீரரைப்பார்த்து நீயாரென்றுகேட்க அதற்கு நற்கீரருஞ் சோழராசனைப்பார்த்துச் சொன்னதாவது.

நாலாயிரத்துத்தொளாயிரமாஞ்சகத்தின்
மேலான நற்கீரெம்பெயர்தான்—வேலால்
உனைந்தபுருவுக்காக வுன்சதையைநேரா
யனைந்தேயறிந்தவனே யாம்.

இப்படிச் சொன்ன நற்கீரரைப் பார்த்துச் சோழராசன் சொன்னதாவது,

வெண்பா

உறவற்றார்போலிவ் வுறையூர்க்குப்படிக்கிப்
பொறையறைகாணும் பூதலத்திலறையும்
நறைகமழுநற்கீரர் னுக்காலிந்த
விறகுவிற்பதேனோ விளம்பு.

என்று சொன்ன சோழராஜனைப் பார்த்து நற்கீரர் சொன்னதாவது,

வெண்பா

கூறுவார்கூறும் பரிசேகுறைவரியான்
வீறுமென்னென்று விடவறியான்—மாதுடனே
எச்சுவாரெச்சும் எளிதாகுமன்றியிலே
விசுவாசம்வாங்கா தென்மின்.

என்று நற்கீரர் சொல்ல, இராஜாவினுடைய மந்திரி நற்கீரரைப் பார்த்துச் சொன்னதாவது.

வெண்பா

பூவேசிலபறிப்பார் பூணேசிலபாடுவார்
பாலேயடிதலையின் பண்பாகுஞ்—சாகவே

மதுரங்கள்வண்டுண் ணும் மாவேவடிவாம்
இதுதவிரவுண்டோ வியம்பு.

அப்படி மந்திரி சொல்லவே நற்கீரதேவருக்கு மகா கோபம் வந்து இவனே நம்மைப் பார்த்து சொல்லுகி றவனென்று அப்போது சோழராஜனுக்கு அற்புத வாய்வுண்டு அந்தவாயு மந்திரவுற்சாடனம் பண்ணி அந்த மந்திரிபேரிலே குதிக்கவிட்டார். அதுகண்டு மந்திரியும் வெட்கித் தலையிறங்கிக் கொண்டான். அதைச் சோழராஜன் பார்த்துப் பயந்து எழுந்திருந்து நற்கீரரை அங்கீகரித்து உம்முடைய மகிமையைப் பார்க் கத்தக்கினபேர் யாவரென்று நற்கீரரைத் தழுவிக் கொண்டு நல்ல வார்த்தைகளைச் சொல்லித் தேவரீ ரனுக்கிரகத்தினால் தமிழறிவாளை யெழுப்பி இரட்சிக்க வேண்டு மென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டான். அப்பொழுது நற்கீரர் சந்தோஷப்பட்டு அவளை யெடுத்துவரச் சொல்லென்றார். அப்படியே போய்த் தமிழறிவாளை யெடுத்து ஒரு கட்டிலின்பேரிலே போட் டுக்கொண்டு நற்கீரர் முன்னே வைத்தார்கள். பட்ட ணத்தி லுண்டான சகல செனங்களும் வந்து புதுமை யாகப் பார்த்துக்கொண் டிருக்கிற சமயத்திலே நற்கீர தேவருந் தமது கமண்டலத்தால் சலங்கொண்டு வந்து அபிமந்திரித்துத் தமிழறிவாள்பேரிலே யிறைத்துச் சொன்னதாவது,

வெண்பா

வீறுயிவளுக்கு மிக்கோரும் வேந்தனுககும்
மாறுகநாம்வந்த வாரறியக்—கூறுய
விழுந்ததிணமுள்ளடக்கி வெள்ளெலும்புமொன்று
யெழுந்திருக்கவேண்டு மினி.

என்று சொன்னவுடனே வயிறு பீறுண்டு சரிந்து விழுந்திருந்த நிணமனைத்து முள்ளடங்கி ஒன்றுகப் பொருந்தி நித்திரை கொண்டிருந்து நீங்கினவள்போ லத் தமிழறிவாள் விழித்துப் பார்த்தந்த கவிக்குப்பயன் சொல்லிக்கொண் டெழுந்திருந்தாள் பயன்சொன்னவிப ரம் பாரைபாரையென் றெழுந்தாள் அதற்கு நற்கீரதே வர் சொன்ன விபரம் பூரைபூரையென்றார். அதன் பிற கு அந்தச்சபையைப் பார்த்து வெட்கித் தலையை இற

ங்கிக்கொண்டு நின்றாள் நின்றவளைப் பார்த்து நற்கீரர் சொன்னதாவது,

வெண்பா.

சிறந்ததமிழின் றிறமறியமாட்டாமல்
இறந்தனையோவுனறனைக்கொன்றாயே—அறிந்த
செந்தமிழின்சோழனுக்குச் சேரவந்துநின்றுதொழுஞ்
சொந்தமுன்னுச்சியுடன் சொல்.

என்று நற்கீரதேவர்சொல்லத் தமிழறிவாள் சோழராஜனைப் பார்த்துச் சொன்னதாவது,

வெண்பா.

நானேபழிபடைத்தேன் நாடாதென்னுவுரைய
தேனார்கமலத் திசைமுகனார்தானே
தலையோட்டிலுள்ளபடி தப்புமோசொல்லீர்
தலையோட்டிடுமாமுனியே காண்.

என்றுதமிழறிவாள் சொல்லச்சோழராஜன் அந்த வசனத்தைக்கேட்டுச் சந்தோஷிக்கத் திரும்பவுந்தமிழறிவாள் தமிழுக்கு அகஸ்தியனும் வடமொழிக்குப் புலத்தியனு மிருவர்களுடையகல்வியை அறியும்போது என்னையேயொழிய மற்றொருவருமில்லையென் றிருக்க வேண்டாம் கல்வி யதிகங்கண்டு பிரமனானவன் சரஸ்வதியை நாவிலே தரித்துக்கொண்டார் விஷ்ணுவானவர் மார்பிலே தரித்துக்கொண்டார் ஈஸ்வரன் சங்கத்தின் கீழேயிருக்கிறான் என்றுசொல்ல சோழராஜன் சந்தோஷப்பட்டு தமிழறியும் பெருமாளைக் கையைப் பிடித்துக் கொண்டு நற்கீரர்கையிலே கொடுத்து இவளை நான் பெற்ற பெண்ணாக வளர்த்தேன் இந்தப்பெண்ணை தேவரீர் கலியாணம் பண்ணிக்கொள்ளும் உமக்குவேண்டிய ராச்சியமும் விட்டுச் சிறிது திரவியமுங் கொடுக்கிறேனென்று சோழராஜனைப் பார்த்துச் சொன்னதாவது.

வெண்பா.

ஆரோர்கடமை யடைவுடனேகொண்டுமிக
வீறாயுலகாளும் வேந்தனே—கூறாய்
எனக்கிவளுமேமகள்கா ணென்றன்மருமகன்
றனக்குரியளாவளினி தான்.

என்று சொல்லக்கேட்டுச் சோழராஜன் ஏனையா மகளென்கிறீர் அப்படிச் சொல்லவேண்டாம் இவளைக்

கலியாணம் பண்ணிக் கொள்ளுமென அதற்கு நற்கீரர் சொல்லுவார் இப்போது செத்தவளைத் திரும்பவும் எழுப்பினேமே ஆனபடியினாலே நமக்குமகளல்லவோ இதுவுமல்ல நம்முடைய மருமகன் ஒருபைய னிருக்கிறானவனுக்கு இவளை கட்டிவைக்க வேணுமென்று வெகு பிரயாசைப்பட்டு ராத்திரியெல்லா மிவளுடனே தர்க்கித்தோமென்றார். அதுகேட்டுச் சோழராஜன் சந்தோஷப்பட்டுத் தேவரீர் மருமகனுக்குக் கொடுக்க நாங்கள் எத்தனைபுண்ணியம் பண்ணினோ மப்படியே மருமகனையழைப்பியு மையாவென்றான் அதுகேட்டு நற்கீரதேவர் அங்கேயிருந்தபடியேதானே அடா விறகுதலையா இங்கேவாடாவென்று கூப்பிட்டழைத்தார். அந்தவிசேஷங் கேட்டு விறகுதலையன் பாசிப்பல்லும் பூசமுகமும் வெந்தவீட்டுக் கழிமரம்போல காலும்கையும் அரையிற் கட்டியகொடியும் அதிலேசொருகிய அரிவாளும் இவ்விதமானகோலத்துடனே வந்துநின்றான். அப்போது தமிழறிவாளும்பார்த்து முன்னாலே நாம் இவனைகடைத்தெருவிற்கண்டு காரியுமிழ்ந்தோமே அவன்தான் வந்தான் என்ன அதிசயமென்றுவெட்கித் தலையையிறங்கிக்கொண்டு வெகுவாய் மனது சஞ்சலமா யிருந்தாள். சோழராஜன்கண்டு மிகவும் வியாகூலத்துடனே நற்கீரரைப்பார்த்து, சுவாமி அவளிருந்தி இருப்பும் இவள் நடவடிக்கையும் வெகுபிரகாசமாய்க் கீர்த்தியடைந்திருந்ததும் இராச்சியமுழுதுமறியுமே அப்படிக் கொத்தவளுக்குக் கட்டுவிக்கிறோமென்றுவதற்கு நான்சொல்லப் போகிற தென்னவிருக்கிறது தேவரீர் சித்தத்துக்குச் சரியானபடிசெய்துகொள்ளுங்களென்றான். அப்போது தமிழறியும்பெருமாளும் நற்கீரர் பாதத்திலே சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுக் கைகட்டிநின்று சொன்னதாவது,

வெண்பா.

பாதம்பணிந்தேன் பழையதமிழ்முனியே
ஏதுமறியேனினியுரையேன்—பேதையேன்
செய்துபிழைபொறுத்துத் திருவுளத்துக்கேற்கச்
செய்துவித்துக்கொள்ளு மினி.

என்றுசொல்லிச் சிந்தைவியாகூலமாய் நொந்துக் கொண்டிருந்த தமிழறிவாளுஞ் சோழமகாராசனையும்

பார்த்து நற்கீரதேவர் முற்பிறப்பு உணர்த்தியவிபரங் கேளுஞ் சோழராஜாவே முன்ஜென்மத்திலே இந்தத் தமிழறிவாள் இராஜகுமாரத்தி இந்த விறகுதலையனும் இராஜகுமாரன் இவர்க ளிரண்டுபேரும் இச்சையான துய் சாவடியிலே இவளை இருக்கச்சொல்லி ஓலை எழுதிப் போட்டதும் அங்கேகடுவந்து இரண்டுபேரும்சிவனைப் போக்கிக்கொண்டு ஆவேசமாயிருந்ததும் ஔவையார் கையிலேவரம்பெற்றும் பிற்பாடு இவளவந்துமரகதவடி வில் வயிற்றிலே பிறந்து தமிழறிவாளனதும் இராஜ குமாரன்போய் விறகுதலையன் வயிற்றிலே பிறந்ததும் பூர்வம் இவளுக்கு பிரம்மா சிருஷ்டிப்பு ஐம்பதுவயது அதிலே பன்னிரண்டுவயது கன்னிகழியா திருந்ததும் ஒருவருஷம் ஆவேசமாயிருந்ததும் அப்பாலிப்போது இருபத்தைந்துவயதுகன்னிகழியாதிருந்ததும் இந்தப் பிறப்பிலே அந்தப் பன்னிரண்டு வருஷமும் அந்தராஜ குமாரனுடனே கூடிவாழத் தக்கதாக நற்கீரர் வந்து ஒரு இராத்திரியெல்லாம் இவளுடனே கதாப்பிரசங் கம்பண்ணி செயிப்பாரென்று ஔவையார் சொல்லிப் போனதும் இவைகளையெல்லாம் ஆதியோடந்தமாய்த் தெரியத்தக்கதாக முதற் பிறப்புணர்த்திச் சொல்லிக் காண்பித்து அப்போது ஔவையார் என்பேரைக் குறித்து சொல்லிப்போன படியினாலேநாம் வந்துபத்தி செலுத்தினோ மென்றார். அப்போது சோழராஜனுந் தமிழறிவாளும் மரகதவடியும் நற்கீரரை நமஸ்கரித்து தேவரீர் சித்தத்திற்குச் சரியானபடி செய்துக் கொள்ளு மென்றார்கள் அப்போது நற்கீரதேவருந் தமிழறி வாளைப் பார்த்துச் சொன்னதாவது,

வெண்பா

ஊருமுறையூரே ஒண்டியாங்கன்னிகையின்
பேருந்தமிழறிவாள் பேராமோ-நேரா
யுனைவிரும்புவாளை யுன்றெய்வந்தந்த
மனைவியிடத்துப்போயிருந்து வாழ்.

என்றுசொல்லிக் காண்பித்து அந்நேரமே பச்சை பந்தல்போடுவித்து நல்ல முகூர்த்தவேளையிலே அந்த விறகுதலையனுக்கு தமிழறிவாளைக் கலியாணம் பண்ணி வைத்துச் சோழராஜனைக்கொண்டு இவர்களிருப்பதற்கு

உப்பரிகையும் ஊரும்விடுத்து பூஷண வகைகளுங் கொடுப்பித்து நீங்களிரண்டுபேருஞ் சுகமாக வாழ்ந்து ஔவையார் அநுக்கிரகப்படிக்குச் சிவனுடைய பாதாரவிந்தஞ் சேரக்கடவீர் உங்களரண்மனைக்குப் போயிருந்து வாழக்கடவீர்களென்று ஆசீர்வதித்து அனுப்பிவைக்க இவர்க ளிரண்டுபேரும் நற்கீரர் பாதத்திலே சாஷ்டாங்கமாக நமஸ்காரம்பண்ணி அனுபவித்துக்கொண்டு தங்களரண்மனைக்குப் போனார்கள் பிற்பாடு நற்கீரருக்குச் சோழராசன் ஒருவரிபூஷணங் கட்டுவர்க்கமுங்கொடுத்துப் பச்சை பல்லக்குமிட்டு நமஸ்கரித்து நற்கீரதேவரை மதுரைக்கு அனுப்பிவைத்தான் நற்கீரதேவருஞ் சோழராசன்கையில் விடை பெற்றுக்கொண்டு மதுரைக்கு வருகிறபோது பாண்டிய ராசாவும் சங்கத்தாரும் எதிர்கொண்டுவந்து சந்தோஷப்பட்டு நற்கீரதேவரை அழைத்துக்கொண்டு போனார்கள் நற்கீரதேவரும் உறையூர்க்குபோய்த் தமிழறிவாளைவென்ற விபரமெல்லாம் சவிஸ்தாரமாகவே தான் சொன்னார் அதுகேட்டு பாண்டியராசன் மகாசந்தோஷத்தை யடைந்து நற்கீரதேவருக்குவேண்டிய வெகுமதிகொடுத்தான் சங்கத்தாரும் சந்தோஷத்தை யடைந்தார்கள். நற்கீரதேவரும் சங்கத்தாருடனேகூடிச் சங்கப் பலகையின்மீதெழுந்தருளி யிருந்தார். இப்பால் தமிழறிவாளும் ஔவையார் அனுக்கிரகப்படிக்கு இருபத்தைந்து வயதளவுங் கன்னிகழியாமலிருந்து பின்பு நற்கீரதேவர் அருளினால் பூர்வோத்திரமறிந்து பன்னிரண்டு வருஷம்வரைக்குஞ் சகலசம்பத்தையும் சவுக்கியமாக அதிக சந்தோஷத்துடனே அனுப்பித்துக் கொண்டிருந்து பிற்பாடு இருவரும் மோட்சத்தை யடைந்தார்கள்.

## தமிழறியும் பெருமாள் கதை

முற்றிற்று.

---



திருமகள் விலாசம் பிரஸ் சென்னை—1933.

15-12-94

# புத்தக விளம்பரம்

☞ இதேமாதிரி பெரிய எழுத்தில் அச்சிடப்பட்ட புஸ்தகங்கள்:—

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்ரீமகா பக்தவிஜயம் 6-தாசர்கள் அடங்கியது | | 2 | 8 | 0 |
| ஸ்ரீமத் கம்பராமாயண வசனம் படங்களுடன் | | 5 | 8 | 0 |
| ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் | ஷை | 2 | 0 | 0 |
| ஆதிபர்வம் | ஷை | 2 | 0 | 0 |
| விராடபர்வம் | ஷை | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை | ஷை | 1 | 4 | 0 |
| தேசிங்குராஜன் கதை | ஷை | 0 | 6 | 0 |
| நளச்சக்கிரவர்த்தி கதை | ஷை | 0 | 8 | 0 |
| மதனகாமராஜன் கதை | ஷை | 0 | 12 | 0 |
| அல்லியரசாணி மாலை | ஷை | 0 | 12 | 0 |
| அபிமன்னன் சுந்தரிமாலை | ஷை | 0 | 12 | 0 |
| கிருஷ்ணன் தூது | ஷை | 0 | 8 | 0 |
| மதுரைவீரன் கதை | ஷை | 0 | 6 | 0 |
| ஏணியேற்றம் | ஷை | 0 | 4 | 0 |
| தருமா அஸ்வமேதயாகம் | ஷை | 0 | 12 | 0 |
| கோவிலன் கதை | ஷை | 0 | 8 | 0 |
| சித்திராபுத்திரன் கதை | ஷை | 0 | 8 | 0 |
| துரோபதை குறம் | ஷை | 0 | 6 | 0 |
| பஞ்சபாண்டவர் வனவாசம் | ஷை | 1 | 0 | 0 |
| கருடபுராண வசனம் | ஷை | 0 | 8 | 0 |
| மயில்ராவணன் கதை | ஷை | 0 | 8 | 0 |
| அருணகிரியந்தாதி | ஷை | 0 | 4 | 0 |
| ததிரேசன் ஆனந்தக்களிப்பு | ஷை | 0 | 6 | 0 |
| புவனேந்திரன் அம்மானை | ஷை | 0 | 10 | 0 |
| வைகுந்த அம்மானை | ஷை | 0 | 12 | 0 |
| மின்னொளியாள் குறம் | ஷை | 0 | 8 | 0 |
| புரூரவச்சக்கிரவர்த்தி கதை | ஷை | 0 | 8 | 0 |
| பொன்னுருவி மசக்கை | ஷை | 0 | 6 | 0 |
| கர்ணமகாராஜன் சண்டை | ஷை | 0 | 8 | 0 |
| புனந்திரன் தூது | ஷை | 0 | 10 | 0 |
| மநுநீதி காதல் | ஷை | 0 | 6 | 0 |
| வாலி மோட்சம் | ஷை | 0 | 4 | 0 |

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடராமய்யர் தெரு, மின்ட்பில்டிங் போஸ்டு, சென்னை.